இதே பதிப்பு நேதாஜியிலும், பெரியார் வரலாற்றிலும் இருக்கிறது.

இது ஆசிரியருக்கு.



1. வங்க வீரர் சுபாஷ் சந்திர போஸ்

(வியன்னாவைச் சேர்ந்த படகாஸ்டீன் என்னும் ஊரிலிருந்தபோது எடுத்த படம்)

தேச பக்தர்கள் சரிதை.—11

# வங்க வீரர்

# சுபாஷ் சந்திர போஸ்

(12-போடோ படங்களுடன்)

இது 'தினமணி' ஆசிரியர் ஸ்ரீமான்

T. S. சொக்கலிங்கம்

அவர்கள் இயற்றியது.

புதிய பதிப்பு

அல்லயன்ஸ் கம்பெனி

மயிலாப்பூர், சென்னை.

 [அணா 4

எண் **பொருளடக்கம்** பக்கம்



சித்திரப் படங்கள். — (12)



51-ம் காங்கிரஸ் தலைவர்

2. வங்க வீரர் சுபாஷ் சந்திர போஸ்



# வங்க வீரர்

# சுபாஷ் சந்திர போஸ்

## அத்தியாயம் — 1

### கொந்தளிப்பில் தோன்றிய சந்திரன்

ஒரு நல்ல காரியம் தோன்று முன்பு கஷ்டம் வருவது இயற்கை. பிரசவவேதனை யில்லாமல் குழந்தை பிறக்க முடியாது. திருப்பாற்கடலை முறுகக் கடைந்த பின்புதான் அமிர்தத்தைப் பெற முடிந்தது. நமது புராணங்களைப் பார்த்தால், அவதார புருஷர்கள் தோன்றுமுன்பு தேசத்தில் பெரிய கொந்தளிப்பு இருந்ததாகத் தெரியவருகிறது.

1919-ஆம் வருஷத்தில் இந்தியா ஒரே கொந்தளிப்பில் இருந்தது. ரௌலட் சட்டம் ஜனங்களின் கோபத்தை வளர்த்தது. அந்தச் சட்டத்தை எதிர்க்கச் சத்தியாக்கிரஹம் தோன்றியது. சத்தியாக்கிரஹத்தை அடக்கப் பாஞ்சாலப் படுகொலை நடந்தது. அதைக் கண்டு ஜனங்களின் கோபம், எரிகிற தீயில்

எண்ணெயை வார்த்ததுபோலப் பற்றி உயர்ந்தது. ஹ கமிட்டி விசாரணை பாஞ்சாலப் படுகொலையை மழுப்பிட கோபம் உச்சஸ்தானத்திற்குப் போயிற்று. இதனுடன் பத்து அநீதியும் சேர்ந்துகொள்ளவே கோபம் பூர் யாயிற்று. இதன் பலனுகப் பிறந்ததே ஒத்துழையாமை இயக்கம்.

ஒத்துழையாமைக்குத் தேசமெங்கும் ஆச்சரியமான விதத்தில் ஆதரவு கிடைத்தது. அவ்வளவு தூரம் ஜனங்கள் உணர்ச்சி கொண்டிருப்பார்கள் என்பதை அதற்கு முன்பு யாரும் கனவு கண்டிருக்கக்கூட முடியாது. இந்தியாவின் விடு தலைப் போராட்டத்தில் அது முக்கியமான கட்டம். தேசமெங் கும் ஓர் உத்வேகம் இருந்தது. யுத்தத்தில் பிரிட்டனுக்கு உதவி செய்ததற்கு இதுதான் பலனு என்று யாவரும் கேட்டார் கள். மகா யுத்தத்திற்கு முன்னுல் சாதுக்களாக இருந்த இந் தியர் மகா யுத்தத்திற்குப் பின்னுல் ரோஷமும் ஊக்க மும் உள்ளவர்களாய், விடுதலையில் ஆர்வங்கொண்டவர்களாய் மாறிவிட்டார்கள். இதற்கு முக்கியமான காரணமே மகா யுத்தந்தான். யுத்தத்தில் நடந்த பல சம்பவங்களும், யுத்தத்திற்குப் பின்னுல் ஏற்பட்ட காரியங்களும் இந்தியரை விழிப்படையும்படியாகச் செய்துவிட்டன.

ருஷிய மன்னர் கொலை செய்யப்பட்டார். ருஷியாவில் ஜனங்களின் ராஜ்யம் ஏற்பட்டது. ஆஸ்திரியா ஹங்கேரி ஏகாதிபத்தியம் சிதறியது. ஜெர்மன் சக்கரவர்த்தி நாட்டை விட்டு ஓடினுர். துருக்கி ஏகாதிபத்தியம் சிதைந்தது. இவற்றிற்கெல்லாம் காரணமென்ன என்று ஜனங்கள் யோசிக் கலானுர்கள். அயர்லாந்தில் சுயராஜ்யப் போராட்டம் மும்

முரமாக நடைபெற்றது. இராக், சிரியா, டிரான்ஸ் ஜார் டேனியா, போலந்து, ஹங்கேரி, ஜெக்கோஸ்லாவக்கியா, யுகோஸ்லேவியா முதலிய நாடுகள் சுயராஜ்யம் பெற்றன. இவற்றிற்கெல்லாம் சுயராஜ்யம் கிடைக்கும்போது, நமக்கு ஏன் கிடைக்கக்கூடாதென்று அடிமை நாடுகள் நினைத்தன. நினைக்க நினைக்கச் சுயராஜ்ய ஆவல் அதிகமாயிற்று.

இம்மாதிரியாக ஒரு பக்கம் விடுதலை வேட்கை வளர்ந்து வரும்போது, மற்றொரு பக்கத்தில் அந்த வேட்கை பின்னும் அதிகரிக்கும் விதத்தில் 1919-ல் பல சம்பவங்கள் நடைபெற்றன. இவற்றால் இந்தியா கொந்தளித்துக் கொண்டிருந்தது. என்ன செய்வதென்று யாருக்கும் தெரியவில்லை. மகாத்மா முன் வந்தார். 1920-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதி ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமாயிற்று. திருப்பாற்கடலைக் கடைந்ததுபோல மகா வேகத்தோடு அந்த இயக்கம் இந்தியாவைக் கலக்க ஆரம்பித்தது. பாற்கடலைக் கடைந்தது அமிர்தத்திற்காக. அமிர்தம் கடைசியாகத்தான் வந்தது. அதற்கு முன்பாக லக்ஷ்மி, சந்திரன் போன்ற ரத்னங்கள் கிடைத்தன. அதைப்போலவே சுயராஜ்யத்திற்காக ஆரம்பமான ஒத்துழையாமை இயக்கம் இந்தியாவிற்குப் பல ரத்னங்களைக் கொடுத்தது. அம்மாதிரியாகக் கிடைத்த ரத்னங்களில் ஒருவர் சுபாஷ் போஸ். ஒத்துழையாமை இயக்கம் தோன்றி யிராவிட்டால், ஜனங்களின் சேவைக்கு அந்த ரத்னம் கிடைத்திராது.

அச்சமயத்தில் இந்தியன் ஸிவில் ஸர்விஸ் என்று சொல்லப்படும் ஐ. ஸி. எஸ். வேலைக்கு அவர் தேறியிருந்தார். பாஞ்சாலப் படுகொலை நடந்த அந்த வருஷத்தில்தான்

ஐ. சி. எஸ். பரீட்சைக்காக இங்கிலாந்து சென்றார். ஒத்துழை யாமை இயக்கம் வேகமாய்ப் பரவியது. பலர் பட்டங்களைத் துறந்தனர். கௌரவப் பதவிகளைப் பலர் விட்டனர். வக்கீல்கள் கச்சேரிகளைப் பகிஷ்கரித்தனர். மாணவர்கள் பள்ளிகளை விட்டு நீங்கினர். தேசமெங்கும் உணர்ச்சி வெள்ளம். ஆனால் சர்க்கார் ஊழியர்களுக்குமட்டும் பாரதமாதாவின் அழைப்பு கேட்கவில்லை. பாஞ்சாலத்தில் படுகொலை செய்த ஜெனரல் டயரையும், அவனுக்கு உதவியாயிருந்த கவர்னர் ஓட்வியரை யும் சர்க்கார் தண்டிக்காமல் விட்டுவிட்ட அநியாயம் அவர் களுக்கு உறைக்கவில்லை. ஆயிரம் இந்தியரைச் சுட்டுத்தள்ளிய ஜெனரல் டயருக்கு, சீமையில் 18 ஆயிரம் பவுனும் ஒரு வீர வாளும் பரிசளித்ததால் ஏற்பட்ட அவமானம் தைக்கவில்லை.

எனவே சர்க்கார்வேலையைத் தள்ளிவிட்டு ஒத்துழையாமை யில்சேர்ந்தவர்கள் மிகவும் சொற்பம். சாதாரண உத்தியோகஸ் தர்களே அப்படியென்றால், ஐ. சி. எஸ்.காரர்களைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை. இந்தக் காலத்தில் எவ்வளவு பெரிய உத்தியோகமும் சாதாரண ஜனங்களுக்குப் பிரமாதமாய்த் தோன்றாது. இது ஒத்துழையாமை, சட்ட மறுப்பு இயக்கங் களால் ஏற்பட்ட கண்விழிப்பு. ஒத்துழையாமைக்கு முன்னு விருந்த மனப்பான்மை வேறு. ஸிவில் ஸர்விஸ் என்றால் தேவ லோகபதவி என்பதுதான் அக்காலத்திய அபிப்பிராயம். அதை இக்காலத்திலுள்ளவர்கள் ஊகித்துக்கூட அறிந்துகொள்ள முடியாது. அவ்வளவு உயர்வாய்க் கருதப்பட்ட வேலையை உதறித் தள்ளுவதென்றால், அக்காலத்தில் அவ்வளவு சுலப மல்ல. தன்னல மறுப்பும், தீவிர தேச பக்தியும் இருந்தா லொழிய யாராலும் அதைச் செய்ய முடியாது. அத்தகைய

ஸிவில் ஸர்விஸ் வேலையைச் சுபாஷ் பாபு 1921-ல் துச்சமாய்க் கருதினர். ஒத்துழையாமை இயக்கம் இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல அவரை இழுத்தது. தேசத்திற்கு ஏற்பட்ட அவமானத்தை அவரால் தாங்கமுடியவில்லை. எனவே சீமையிலேயே ஐ. சி. எஸ். வேலையை ராஜிநாமாச் செய்தார். இந்தியா மந்திரி எவ்வளவோ முயன்றும் அவர் மனதைத் திருப்பமுடியவில்லை. அவ்வருஷம் தேறியவர்களில் நான்காவது வரிசையில் அவர் இருந்தும், எவ்வளவோ பெரிய பதவிகள் அவருக்குப் பிற்காலத்தில் கிடைக்கச் சந்தர்ப்பங்கள் இருந்தும், அவற்றையெல்லாம் பெரியனவாக அவர் கருதவில்லை. தம்முடைய தகப்பனரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே ஐ. சி. எஸ். பரீட்சைக்கு அவர் போயுங்கூட, தகப்பனர் விருப்பத்தைவிடப் பாரதமாதாவின் அழைப்பையே பெரிதாய் நினைத்தார். எனவே படித்துத் தேறிப் பெற்ற பதவியைப் பிரிட்டிஷார் முகத்திலேயே எறிந்துவிட்டு இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கத்தில் சேருவதற்காகத் திரும்பினர். இந்தியாவிற்கு வந்ததும் நேராக மகாத்மாவைச் சென்று பார்த்தார். அவர் தேசபந்து தாஸிடம் போகும்படி சொன்னர். சுபாஷ் பாபு தேசபந்துவைப் பார்த்துத் தேசசேவையில் இறங்கினர்.

---

## அத்தியாயம் — 2

## பிறவியில் துறவி

ஒத்துழையாமையில் சுபாஷ் போஸ் சேரும்போது அவருக்கு 24 வயது. அந்த வயதிற்குள் இவ்வளவு பெரிய தியாக புத்தி தோன்றவேண்டுமானல், சுபாஷின் இயற்கை

யான சுபாவமே தியாக உருவாய் இருக்கவேண்டும். ஆயிரம் ரூபாய் வைத்திருப்பவன் பத்து ரூபாய் கொடுப்பது தியாக மல்ல. ஒரு ரூபாய் ஆஸ்தி உள்ளவன் அதை அப்படியே கொடுப்பதுதான் பெரிய தியாகம். வேலை கிடைக்காத வக்கீல், தொழிலை விடுவது பெரிய காரியமல்ல. பெரிய வழக் கொன்றைக் கையில் பெற்று அதை வேண்டாமென்று மறுப் பதே தியாகம். உலகிலுள்ள சுகங்களையும் அதிகாரங்களையும் அநுபவித்தபின்னர் அவற்றைத் துறப்பது துறவல்ல. அவை யெல்லாம் கைக்கு வந்த க்ஷணமே, அவை வேண்டாமென்று உதறுவதே துறவு. சுபாஷின் பெற்றோர் பெரிய பணக் காரர்களல்ல. சுபாஷின் தந்தையார் ராய்பகதூர் ஜானகி நாத போஸ் கட்டாக்கில் சர்க்கார் வக்கீலாயிருந்தார். அவருக்கு ஒருவர் இருவரல்ல; எட்டுப் பேர் ஆண் குழந்தைகள். என்ன தான் வருமானமிருந்தாலும் எட்டுப் பையன்களையும் படிக்க வைக்கிறதென்பது சுலபமான வேலையல்ல. சுபாஷ் போஸை ஐ. ஸி. எஸ். வரை படிக்க வைத்தார். அவர் சகோதரரான ஸ்ரீ சரத் சந்திர போஸைப் பாரிஸ்டர் பரீக்ஷை வரையில் படிக்க வைத்தார். மற்றொரு சகோதரரான டாக்டர் சுனில் சந்திர போஸ் எம். டி. பரீட்சையில் தேறினார். மற்ற எல்லாச் சகோ தரர்களுமே நன்றாய்ப் படித்திருக்கிறார்கள். எனவே எட்டுச் சகோதரர்களும் படித்து முடிந்தபின்பு குடும்பச் சொத்து விசேஷமாய் இருக்குமென்று எதிர்பார்க்க முடியுமா?

இந்த நிலைமையில் சுபாஷ் சந்திர போஸ் ஐ. ஸி. எஸ். வேலையை விட்டாரென்றால் அது உண்மையிலேயே பெரிய துறவுதான். அவ்வளவு தூரம் தியாகபுத்தி ஏற்பட வேண்டு மானால், சுபாவத்திலேயே தியாகத்தையே லட்சியமாய் அவர் கொண்டிருக்க வேண்டுமென்பது நன்றாய்த் தெரிகிறது



3. பழையவரும் புதியவரும்

அவருடைய இளமைப் பருவத்துச் சரித்திரமும் அந்த மனப் போக்கையே காட்டுகிறது. 1913-ஆம் வருஷத்தில் சுபாஷ் போஸ், தம்முடைய 16-ஆவது வயதில் மெட்றிகுலேஷன் பரீட்சையில் தேறினர். கல்கத்தா ஸர்வகலாசாலையில் தேறிய மாணவர்களில் இரண்டாவது ஸ்தானம் வகித்தார். எப். ஏ. வகுப்பிற்கு வந்தவுடனேயே பாரமார்த்திக வழிகளில் அவர் புத்தி சென்றது. சுபாஷின் தாயார் மிகுந்த மதபக்தியுள்ளவர். அவருடைய பக்தி சிரத்தையே சுபாஷுக்கு வந்தமிதென்று சொல்லலாம். ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசங்களையும் வேறு பல மத புத்தகங்களையும் அவர் வாசித்தார். தாம் படித்தவைகளைப் பற்றித் தம் தாயாருடன் விவாதிப்பது அவர் வழக்கம். ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும், கஷ்டப்படுகிறவர்களுக்கும் உதவி செய்வதையே தமது முக்கிய கடமையாகக்கொண்டு அங்ஙனமேசெய்து வந்தார். இந்த வழியில் புத்தி திரும்பிவிட்டபடியால், படிப்பில் நாட்டமில்லை. சன்னியாசியாகி எப்பொழுதும் தொண்டு செய்யவேண்டுமென்று முடிவு செய்தார். வீட்டில் யாரிடமும் சொல்லாமல், படிப்பையும் விட்டுவிட்டு ஒரு குருவைத் தேடிப்புறப்பட்டார்.

காசி, ஹரித்வாரம், பிருந்தாவனம் போன்ற க்ஷேத்திரங்களுக்கெல்லாம் அவர் சென்று குருவைத் தேடினர். அவர் தம் மனக்கண்ணில் சித்திரித்ததுபோன்ற குருவை எங்கும் காணமுடியவில்லை. பல சன்னியாசிகளுடன் பழகிப் பார்த்தார். சிலர் போக்கு அவருக்குப் பிடிக்கவில்லை. பலர் சுக போகங்களில் மூழ்கியிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார். குருவைத் தேடித் திரியும் வேலை வீண் என்று அவருக்குத் தோன்றவே, அந்த முயற்சியைக் கைவிட்டு வீடு திரும்பி

ஞர். விவேகானந்தருக்கு ராமகிருஷ்ண பரமஹம்ஸர் கிடைத்ததைப்போலச் சுபாஷுக்கு ஒரு ராமகிருஷ்ணர் கிடைத்திருப்பாரானல், அவரும் மற்ருெரு விவேகானந்த ராயிருப்பார்.

வீடு திரும்பியவருக்குச் சன்னியாச ஆசை விடவில்லை. அந்தத் தர்மம் அவர் உடம்பில் கலந்து அமைந்ததாயிருந்தது. என்ருலும் சரியான குரு கிடைக்காதபடியாலும், வேறு என்ன செய்வதென்று அவருக்குத் தோன்ருதபடியாலும், மீண்டும் ஸர்வகலாசாலையில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தார். எப். ஏ., வகுப்பிற்கு வந்தார். சிறந்த புத்தியும், துணிந்த சிந்தையும், பரந்த நோக்கமும், கனிந்த உள்ளமும் கொண்டவராகச் சுபாஷ் விளங்கியபடியால், அவர் தம் வகுப்பிலுள்ள மாணவர்களுக்குத் தாமே தலைவராய் விளங்கிஞர்.

பி. ஏ., வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும்போது ஒரு சம்பவம் நடந்தது. வங்காளத்திற்குக் கல்வி இலாகா டைரக்டராகப் பின்ஞல் வந்த சி. எப். ஓட்டன் என்பவர் அச்சமயம் பிரஸிடென்ஸி காலேஜில் புரொபஸராக இருந்தார். ஒருநாள் இந்தியரைப் பற்றி அவமரியாதையாகத் துடுக்காய் ஓட்டன் பேசிஞர். மாணவர்களுக்கு இந்த அவமானம் கோபத்தை உண்டுபண்ணியது. ஓட்டனுக்கு மாணவர்கள் சரியானபடி புத்தி கற்பித்தார்கள். அதற்குச் சுபாஷ் தான் காரணமா யிருக்கவேண்டுமென்று கலாசாலை அதிகாரிகள் நினைத்தபடியால், அவரைக் கலாசாலையிலிருந்து நீக்கி விட்டார்கள்.

இது 1915-ல் நடந்தது. 1917 வரையில் அவர் படிப்பு தடைப்பட்டது. அந்த வருஷத்தில் சர். அஷுடோஷ் முக்கர்

ஜியின் உதவியால் மீண்டும் கலாசாலையில் சேர்ந்துகொள்ள ஸர்வகலாசாலையின் அநுமதி சுபாஷுக்குக் கிடைத்தது. ஸ்காட்டிஷ் சர்ச் காலேஜில் சேர்ந்து படித்து பி.ஏ., பரீட்சையில் தேறினர். அவர் எடுத்துக்கொண்ட தத்துவ சாஸ்திரப் பரீட்சையில் மாகாணத்திலேயே முதல்வராகத் தேறினர். அதன் பின்னல், 1919-ஆம் வருஷக் கடைசியில் ஐ.ஸி.எஸ். பரீட்சைக்காக இங்கிலாந்து போனர். ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேறியதோடு, கேம்பிரிட்ஜ் பி. ஏ., பரீட்சையிலும் தேறினர்.

இவ்வளவு தூரம் அவர் படிப்பில் உயர்ந்துகொண்டு போனபோதிலும், இவை அனைத்தும் அவர் உள்ளத்தில் பதிந்திருக்கும் பாரமார்த்திகக் கொள்கையின்மீதே கட்டப் பட்டவையாகும். குரு ஒருவர் கிடையாததால் அவர் மீண்டும் படிப்புக்குத் திரும்பினர் என்பதை மறந்துவிடக்கூடாது. அப்படித் திரும்பியதும் சுவாமி விவேகானந்தரையே தம் குருவாகக் கொண்டு, பிரம்மசாரியாகவே தமது வாழ் நாட்களைக் கழிப்பதென்று தீர்மானித்தார். இன்றுவரையில் அவர் பிரம்மசாரிதான். கடுமையான கட்டுத் திட்டங்களை வாழ்க்கையில் மேற்கொண்டு சன்னியாசியாக வாழ்ந்து வருகிறர். அவருடைய தீவிரமான பேச்சுகளையும் செய்கைகளையும் பார்ப்பவர்களுக்கும், மேல்நாட்டில் பல வருஷங்கள் அவர் வசித்ததை அறிந்திருப்பவர்களுக்கும் அவருடைய சன்னியாச வாழ்க்கை ஆச்சரியமாய்த் தோன்றலாம்.

1931-ஆம் வருஷத்தில் சுபாஷ் போஸும் அவருடைய நண்பர்கள் இரண்டுபேரும் கல்கத்தாவிலிருந்து கராச்சிக் காங்கிரசுக்குப் புறப்பட்டுப் போனர்கள். இரண்டு பகலும்,



4. சுபாஷ் போஸ் மானஸிக குரு, சுவாமி விவேகாநந்தர்

மூன்று இரவும் ரயில் பிரயாணம். பிரயாணகாலம் முழுவதி லும் போஜன வேளைகளில் நண்பர்களுக்குத் தாமே பரி மாறும் வேலையையும், பாத்திரங்களைச் சுத்தம் செய்யும் வேலையையும் செய்துவந்தார். நண்பர்கள் எவ்வளவோ தடுத் தும் கேட்கவில்லை. சேவை செய்வதில் அவருக்குள்ள ஆர் வத்தை இச்செயலால் அறியலாம். இத்தகைய மனப்பான் மையுள்ளவரே சுபாஷ் போஸ் என்பதை அறிந்துகொண் டால்தான் ஐ. ஸி. எஸ். பதவியைத் துச்சமாய் உதறித் தள் ளிய அவருடைய தீரத்தையும் தியாகத்தையும் அச்செயலின் காரணத்தையும் சுலபமாய்த் தெரிந்துகொள்ள முடியும்.

---

## அத்தியாயம் — 3

## ரீடிங்கைக் கலங்கவைத்த ஹர்த்தால்

**1921**-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 17-ஆந் தேதி பிறந்தது. அன்று கல்கத்தா ஒரு நிர்மானுஷ்யமான பட்டணம் போல விளங்கியது. தெருவில் ஒரு மோட்டாராவது கிடை யாது. ஒருடிராம்கூட ஓடவில்லை. ஒரு கடையேனும் திறக்கப் படவில்லை. இரவு, பகலாய்விட்டதோ என்று சந்தேகப்படும் படி அவ்வளவு பரிபூர்ண ஹர்த்தால் அன்று நடைபெற்றது. அதைப்போன்ற பூர்ண ஹர்த்தாலை அதற்கு முன்போ பின்போ பார்த்ததில்லை. அன்றுதான் வேல்ஸ் இளவரசர் (சமீபத்தில் முடி துறந்த எட்வர்ட் மன்னர்) பம்பாயில் வந்து இறங்கினர். இந்தியா முழுவதும் ஹர்த்தால் அநுஷ்டிக்க வேண்டுமென்று காங்கிரஸ் உத்தரவிட்டது. கல்கத்தாவில் ஹர்த்தால் நடத்தும் பொறுப்பைச் சுபாஷினிடம் தேசபந்து தாஸ் கொடுத்தார். சுபாஷின் காரியத்திறமை அன்று வெளிப்

பட்டது. ஹர்த்தாலின் வெற்றியைக் கண்டு கல்கத்தா வாசிகளே ஆச்சரியப்பட்டார்கள். சுபாஷின் புகழ் ஓங்கியது. நிகூஷண்யமான அறிவோடு, சிறந்த காரியத்திறமையும் அவரிடம் உண்டென்பதை வங்காளம் அறிந்தது.

மாதம் 25 ஆயிரம் ரூபாய் சம்பாத்தியம் செய்து வந்த தேசபந்து தாஸ் தமது வக்கீல் தொழிலை விட்டு ஒத்துழையாமையில் சேர்ந்தது, வங்காளத்திற்கே ஒரு பெரிய உற்சாகத்தை உண்டுபண்ணியது. ஆயிரக்கணக்கான மாணவர்களுக்குத் தேசபந்து உதவிசெய்திருக்கிறார். ஆதலின் பள்ளி பகிஷ்கார வேகம் கல்கத்தாவில் பற்றியதைப்போல வேறெங்கும் அவ்வளவு அதிகமாய்ப் பற்றவில்லையென்று சொல்லலாம். பகிஷ்காரம் செய்த மாணவர்களின் படிப்புக்காகத் தேசிய கலாசாலையைத் தேசபந்து ஏற்படுத்தினர். அந்தக் கலாசாலையின் அதிபதியாகச் சுபாஷை 1921-ஆம் வருஷம் மே மாதத்தில் தேசபந்து நியமித்தார். பின்னால் சட்ட மறுப்பு வரவே, தேசியத் தொண்டர் படையின் தளகர்த்தராகச் சுபாஷை நியமித்தார். கல்கத்தாவில் ஆயிரக்கணக்காகத் தொண்டர்கள் ஜெயிலுக்குச் சென்ற விநோதத்தைப் பலர் மறந்திருக்கமுடியாது. போலீஸ் மோட்டார் வண்டிகளுக்குத் தொண்டர்களை கொண்டுபோகும் வேலை தாங்கமுடியாத கடுமையாயிருந்தது. கடைசியாக ஜெயிலில் இடமில்லாத கஷ்டம் ஏற்பட்டது. ஒரு ஜெயிலில் இடமில்லாவிட்டால் மற்றொரு ஜெயிலுக்குத் தொண்டர்களிடம் சீட்டுக்கொடுத்துப் போலீஸ்பாரா எதுவுமில்லாமல் அதிகாரிகள் அனுப்பினார்கள். அதில் யாராவது வீட்டுக்குப் போனால் போகட்டும் என்பது அவர்கள் நினைப்பு; ஆனால் தொண்டர்கள் வீட்டுக்குப் போவதில்லை. சீட்டுக்கொடுத்த ஜெயில் கதவைத் தட்டுவார்கள்.

கடைசியாகப் பல சர்க்கார்க் கட்டிடங்களை ஜெயில்களாக மாற்ற நேரிட்டது.

கல்கத்தாவில் இவ்வளவு மும்முரமாக இயக்கம் நடப்பதைப் பார்த்து வைசிராய் லார்ட் ரீடிங் பயந்து போனார். கல்கத்தாவிற்கு வேல்ஸ் இளவரசர் வரும்போது பகிஷ்காரம் இல்லாமல் செய்ய முயன்றார். அவ்வளவு தீவிரமாய் நடத்திய காரியத் திறமைக்குச் சுபாஷ் போஸே பொறுப்பு. டிசம்பர் மாதத்தில் சுபாஷுக்கு முதல் தடவையாக 6 மாதம் தண்டனை கிடைத்தது. 1922-ஆம் வருஷம் அக்டோபர் மாதத்தில் வங்காள வெள்ள நிவாரணக் கமிட்டிக்கு முக்கிய காரியதரிசியாயிருந்து மிகத் திறமையாக நிவாரண வேலையைச் செய்தார். அவர் வேலைகளை எல்லோரும் புகழ்ந்தார்கள். கவர்னர் லார்ட் லிட்டன் கூடப் புகழ்ந்தார். பின்னால் 1921-ஆம் வருஷம் வரையில் சுயராஜ்யக் கட்சியின் பத்திரிகையான 'பார்வேர்டு''க்குப் பிரதம ஆசிரியராயிருந்து அரிய வேலைகள் செய்தார்.

1924 ஏப்ரல் மாதத்தில் தேசபந்து தாஸ் கல்கத்தா கார்ப்பொரேஷனின் மேயரானார். பிரதம நிர்வாக உத்தியோகஸ்தராகச் சுபாஷ் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த வேலையில் இருக்கும்போது, கார்ப்பொரேஷனைச் சீர்திருத்தச் சுபாஷ் செய்த வேலைகள் கொஞ்சமல்ல. அவர் சேவைகளை எதிரிகள்கூடப் புகழ்ந்தார்கள். அந்த வேலையில் இருக்கும்போது அவர் எவ்வளவு கவனமாய் அதைப் பார்த்துவந்தார் என்பதற்கு, அவர் சென்ற வருஷம் எழுதிய கட்டுரையிலிருந்து சில வாக்கியங்களைக் கீழே கொடுக்கிறோம். அவர் சொல்லுகிறார்:—



5. சித்தரஞ்சன் தாஸ் — சுபாஷின் ராஜீய குரு

2

"சில்லறை விஷயங்களை யெல்லாம் நுணுக்கமாய் ஆராயக்கூடிய சக்தி இருந்தால்தான் நிர்வாகத்தில் வெற்றி கிடைக்கும். என்னுடைய முனிசிபல் அநுபவம் இது. நிர்வாக வேலையில் முழுமனதையும் ஈடுபடுத்தி வேலை செய்வதென்றால், பெரிய விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க அவகாசமே இராது. 1924-ல் நான் கல்கத்தா கார்பொரேஷனில் பிரதம நிர்வாக அதிகாரியாயிருந்தபோது நடந்த விஷயங்கள் நன்றாய் ஞாபகத்தில் இருக்கின்றன. கார்ப்பொரேஷன் நிர்வாகத்தின் அம்சங்கள் எல்லாவற்றையும் கவனிப்பதில் நான் மூழ்கிப் போய்விட்டேன். காங்கிரஸ் வேலையை அடியோடு விடும்படி நேர்ந்தது. ஆனால், காங்கிரஸ் வேலை செய்ய ஆட்களுக்குப் பஞ்சமில்லையென்று எனக்கு உறுதி கூறிய பின்புதான் நான் நிர்வாக அதிகாரி வேலையை ஒப்புக் கொண்டேன்."

நிர்வாகத் திறமை சுபாஷுக்கு எவ்வளவு இருக்கிறதென்பதை இதிலிருந்து அறிந்துகொள்ளலாம். அடுத்தபடியாகச் சுபாஷின் நிர்வாகத்திறமை வெளிப்பட்டது, 1928-ஆம் வருஷத்தில். அவ்வருஷம் கல்கத்தாவில் நடந்த காங்கிரசுக்கு, சுபாஷ் தொண்டர்படைத் தலைவராயிருந்து செய்த சிறந்த வேலைகளைக் கண்டு ராணுவ அதிகாரிகள்கூட அச்சரியப்பட்டார்களாம். சுபாஷ் கையில் எடுத்த வேலைகளெல்லாம் மிகுந்த திறமையோடு செய்யப்படும் என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை. அவர் சிரமத்தைக் கொஞ்சங்கூடப் பார்க்கமாட்டார். இரவு பகல் என்ற வித்தியாசமே இல்லாமல் வேலைசெய்வார். அதிக வேலையினால் அவருக்குக் கோபம் வருவதே இல்லை. பொறுமையில் அவரை மகாத்மாவிற்கு அடுத்தபடியாகச்

சொல்லலாம். ஆனால் ஒருகாரியத்தில் இறங்கிவிட்டால், அதை வெற்றிகரமாய் முடிப்பதற்கு மிகமிகக் கடுமையாய் நடந்து கொள்ளவும் பின்வாங்க மாட்டார். உறுதியும், சிரத்தையும் அவ்வளவு அதிகமாய் அவரிடம் உண்டு. தலைவர் என்றால், பேச்சுச் சாமர்த்தியம் மட்டும் இருந்தால் போதாது. காரியங்களை ஒழுங்காகவும், திறமையாகவும் நடத்தி முடிக்கக்கூடிய ஆற்றல்தான் முக்கியமானது. இந்த ஆற்றல் சுபாஷிடம் உண்டு. இதை இந்தியா மந்திரிகூடச் சமீபத்தில் பார்லிமெண்டில் ஒப்புக்கொண்டார். சுபாஷை விடுதலை செய்வதற்கு முன்பு பார்லிமெண்டில் அவரைப்பற்றிய கேள்வி ஏற்பட்டது. அச்சமயம் சுபாஷைப்பற்றி இந்தியா மந்திரி பேசியபோது, "காரியத் திறமையில் சுபாஷ் பாபு ஒரு பெரிய மேதாவி" என்று சொன்னார். ஜவாஹர்லாலுக்குப் பின்னால் தலைவராக வரும் சுபாஷ் பாபு, காரியத் திறமையில் ஜவாஹர்லாலைப் போலவே சாமர்த்தியம் வாய்ந்தவரா யிருப்பது ஒரு பெரிய திருப்திகரமான விஷயம்.

---

## அத்தியாயம் — 4

## திலகர் பெருமையை அறிந்த விதம்

சுபாஷ் சந்திர போஸ் கார்ப்போரேஷன் வேலைகளை நுணுக்கமாய்க் கவனிப்பதில் மூழ்கிப்போயிருந்தார். ஆனால் கவர்னரா யிருந்த லார்ட் லிட்டன் அவரை விடவில்லை. ஒத்துழையாமை இயக்கம் நின்ற பின்பு சுயராஜ்யக் கட்சி ஏற்பட்டதை நண்பர்கள் அறிவார்கள். இந்தச் சுயராஜ்யக் கட்சிக்குத் தேசபந்து தாஸும், மோதிலால் நேருவும் தலைவர்கள். மோதிலால் இந்தியா சட்டசபையில் போர் நடத்

தினர். வங்காள சட்டசபை மூலம் லார்ட் லிட்டனைத் தாவ் தினற வைத்தார். மந்திரிகளுக்குச் சம்பளம் இல்லையென்ற தீர்மானம் வங்காள சட்டசபையில் நிறைவேறியது. இரட்டை யாட்சியைச் சின்னபின்னப்படுத்திவந்தார் தாஸ். இதை லார்ட் லிட்டனால் பொறுக்க முடியவில்லை. பல உபாயங்களைச் செய்து பார்த்தார். பல அங்கத்தினர்களைத் தமது மாளி கைக்கு அழைத்து நயமும் பயமும் காட்டினர். என்ன செய்தும் சுயராஜ்யக் கட்சி அடங்குவதாயில்லை.

இனி என்ன செய்வதென்று லிட்டன் யோசித்தார். வங்காளத்தில் பயங்கர இயக்கம் இருப்பதாகப் புரளி கிளம்பி யது. உடனே ஆள்தூக்கிச் சட்டம் என்ற வங்காள அவசரச் சட்டத்தை லிட்டன் சிருஷ்டித்தார். அதன்படி சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்த பலரைச் செந்தூக்காய்த் தூக்கி விசாரணை யில்லாமல் ஜெயிலில் போட்டார்கள். அந்த ஆர்ப்பாட்டத் தில் சுபாஷ்மீதும் லிட்டன் கண்ணோட்டம் விழுந்தது. 1924 அக்டோபர் 25-ஆந் தேதி யன்று அவரையும் கைது செய்து ஜெயிலில் அடைத்தார்கள். அன்று முதல் சுபாஷின் வாழ்வில் மிகப் பெரும்பாகம் ஜெயில் வாழ்க்கையிலும், தேசப்பிரஷ் டத்திலும் கழிந்தது. அதனால் அவர் உடலும் நலிந்தது. புத்தி தீக்ஷண்யமும் சுறுசுறுப்புமுள்ள சுபாஷை ஜெயிலில் போட்டது பெரிய அக்கிரமம்.

சுபாஷைக் கைது செய்ததில் தேசபந்துவுக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. கார்ப்பொரேஷன் கூட்டத்தில் அதைப்பற்றி அவர் பேசியபோது.

"தேசபக்தி ஒரு குற்றமானல் நானும் குற்ற வாளியே. சுபாஷ் போஸ் குற்றவாளியானல், நானும் அக்

தகையவனே. கார்ப்பொரேஷன் பிரதம நிர்வாக அதிகாரி மட்டுமல்ல, மேயர்கூடக் குற்றவாளிதான்"

என்று உணர்ச்சி பொங்கிக் கூறினர். சுபாஷைச் சில மாதங்கள் இந்திய ஜெயில்களில் வைத்திருந்து, பின்னல் பர்மாவிலுள்ள மாண்டலேக்கு அனுப்பினர்கள். அங்குள்ள உஷ்ணமும் தனிச் சிறைவாசமும் அவர் ஆரோக்கியத்தைக் குலைத்தன. அதனல் அவர் நிறையில் 40 பவுண்ட் குறைந்தது. பின்னல் க்ஷயரோகம் பீடித்தது. கொஞ்சங் கொஞ்சமாக நோய் வளர்ந்து, 1927-ல் படுக்கையை விட்டு எழுந்திருக்கக்கூட முடியாத நிலைமையில் அவரைக் கொண்டுவந்துவிட்டது.

சுபாஷ் செய்த குற்றம் இன்னதென்று சர்க்கார் சொல்லவே இல்லை. $2\frac{1}{2}$ வருஷங்களாக அவரை ஜெயிலில் போட்ட பின்புங்கூட, அவர் படுத்த படுக்கையில் இருக்கும்படி நேரிட்ட பின்புங்கூட, அவரை விடுதலை செய்ய வங்காள சர்க்காருக்கு மனம் வரவில்லை. மாண்டலே ஜெயிலில்தான் லோகமான்ய பால கங்காதர திலகர் 6 வருஷம் தனித் தவம் புரிந்தார். லோகமான்யர் உபயோகித்துவந்த அறைக்குப் பக்கத்திலேயே சுபாஷும் இருந்தார். 2 வருஷ ஜெயில் வாழ்க்கையில் தம் உடல் கெட்டுப்போனதையும், 6 வருஷம் அதே ஜெயிலில் இருந்தும் லோகமான்யர் அந்தக் கஷ்டங்களால் பாதிக்கப்படாமல் தப்பியதையும் நினைக்கும்போது அவை அவருக்கு அதிசயமாயிருந்தன. அந்த ஜெயில் வாசத்தில், 'கீதா ரகஸ்யம்' என்ற அருமையான நூலையும் திலகர் பெருமான் எழுதினரென்பதை நினைக்கும்பொழுதுதான், அவர் உயர்வு எத்தகையது என்பது தமக்குப் புலப்பட்டதாக அவர் கூறுகிருர். மாண்டலே ஜெயிலுக்குப் போகும்

வரையில் திலகரின் பெருமை எத்தகையது என்பதை முழு வதும் அறிந்துகொள்ள முடியவில்லை என்று சொல்லிவிட்டு அவர் ஒரு சமயம் பேசியது வருமாறு:—

"மாண்டலே ஜெயிலில் லோகமான்ய திலகர் எப்படி வாழ்ந்து வந்தார்? மனதை இடிக்கும் சுற்றுணர்ச்சிகளும் மனிதத் தன்மைக்கு விரோதமான நிலைமையும் அங்கு நிலவி வந்தன. அவை எப்படிப்பட்டவை என்பதை அங்கே ஜெயிலில் இருந்தவர்க்கே தவிர மற்றவர்கள் அறிய முடியாது. இத்தகைய கஷ்டங்களை வென்று வெற்றி வீரராய் வெளி வருவதென்றால், இந்த ஜெயில் கோட்டைக் கற்களை ஊடுருவிச் சென்று அவர் ஆத்மா பிரகாசிக்கக் கூடியதென்றால், அவருடைய பெருமையை வர்ணிக்க வார்த்தைகளால் முடியுமா?"

சுபாஷின் நிலைமை மோசமாய்க் கொண்டு வந்தது. சுபா ஷின் ராஜீயகுருவாய் விளங்கிய தேசபந்து தாஸ் 1925-ல் கால மானார். இச்செய்தியைச் சுபாஷ் கேட்டதும் எவ்வாறு வருந்தி யிருப்பார் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. வெகுதூரத் தில், மாண்டலேயில் இருப்பதால் நண்பர்களைப் பார்க்க முடியவில்லை. ஜெயிலிலும் தனிவாசம். சுபாஷ் போஸ் என்னதான் தீரராயிருந்தாலும் அவர் மனப்போக்கிற்கு ஜெயில் வாசம் பொருந்தவில்லை. அவரை விடுவிக்க வேண்டு மென்ற கிளர்ச்சி வெளியிலும், வங்காள சட்ட சபையிலும் பலமாக நடந்து வந்தது. 1927-ஆம் வருஷம் பெப்ரவரி மாதத்தில், சுபாஷின் தேக நிலைமையைப் பரிசோதிப்பதற் காகச் சுபாஷின் சகோதரர் டாக்டர் சுனில் சந்திர போஸை யும், பர்மாவில் வைத்திய இலாகாவில் இருந்த கர்னல் கெல்

சாலேயும் சர்க்கார் அனுப்பினார்கள். அவர்கள் பரிசோதித்து விட்டுத் தங்கள் அறிக்கையைச் சர்க்காருக்கு அனுப்பினார்கள். சுபாஷின் தேகநிலை கெட்டு விட்டதென்றும், க்ஷயரோக அறிகுறிகள் தென்படுவதால் உடனே அவரை வைத்திய சிகிச்சைக்காகச் சுகவாசஸ்தலத்திற்கு அனுப்ப வேண்டுமென்றும், ஜெயிலில் இருக்கும் வரையில் அவர் தேகநிலைமை அபிவிருத்தி அடையாதென்றும் டாக்டர்கள் தங்கள் அறிக்கையில் சொல்லியிருந்தார்கள்.

மார்ச்சு மாதம் 21-ஆம் தேதி யன்று இதைப்பற்றி வங்காள சட்ட சபையில் கேள்வி பிறந்தது. சர்க்காரின் நிர்வாகசபை அங்கத்தினரான ஸ்ரீ மோபர்லி ஒரு விசித்திரமான பதிலளித்தார். அதாவது, டாக்டர்களின் அறிக்கையிலிருந்து, சுபாஷின் நிலைமை 'தற்சமயம்' அபாயகரமானதாயில்லை யென்று சொன்னார். வேண்டுமானால் வெளி நாடுகளுக்குப் போய் வைத்தியம் செய்துகொள்வதில் சர்க்காருக்கு ஆட்சேபணையில்லை யென்றார். அப்படி வெளிநாடு போவதற்கு, சர்க்கார் அவரை இந்தியாவில் விடுதலை செய்யமாட்டார்களாம். வங்காள அவசரச் சட்டம் காலாவதியாகிறவரையில் அவர் இந்தியாவிற்குள் வருவதில்லை யென்றும் ரங்கூனிலிருந்து இந்தியாவிற்கு வராமல் நேராக ஐரோப்பாவுக்குப் போவதாகவும் வாக்குறுதி யளிக்கவேண்டுமென்றும் மோபர்லி சொன்னார்.

## அத்தியாயம் — 5

## சுபாஷின் கலங்கா நெஞ்சம்

படுத்த படுக்கையிலிருக்கும் சுபாஷின் நிலைமை அபாயகரமான தாயில்லை யென்றால், சர்க்காரின் அகராதியே தனி அகராதிதான். சட்ட மறுப்புக் காலங்களில் தடியடியால் மண்டைகளை உடைத்துவிட்டு, குறைந்தபட்சம் பலாத்காரந்தான் உபயோகிக்கப்பட்டது என்று சர்க்கார் கூறிவந்ததை எல்லோரும் அறிவார்கள். அதைப்போலவே, "அபாயகரமான தாயில்லை" என்ற வார்த்தைக்கும் அர்த்தமே கிடையாது. முதலில், சுபாஷ் போஸ் மீது குற்றஞ் சாட்டிக் கோர்ட்டில் தண்டிக்கவில்லை. ஆள் தூக்கிச் சட்டப்படிக் கைதுசெய்த சமயம், சுயராஜ்யக் கட்சியை ஒடுக்குவதற்குச் சர்க்கார் அடக்கு முறைகளை கையாண்ட சமயம். கார்ப்பொரேஷன் நிர்வாகத்தில் பூர்ணமான கவனம் செலுத்தி, வேறு விஷயங்களைக் கவனிக்க அவகாசமில்லாத சமயத்தில், அவர் பயங்கர இயக்கத்தில் சம்பந்தப்பட்டிருப்பதாகக் கைதுசெய்தார்கள். சுபாஷின் சாமர்த்தியத்தையும், சுயராஜ்யக்கட்சியின் செல்வாக்கையும் கவனிக்கும்போது, அவரைக் கைது செய்ததற்குக் காரணம் சுயராஜ்யக் கட்சியின் வளர்ச்சியே யொழியப் பயங்கர இயக்கமல்ல என்பது நிச்சயமாய்த் தெரியவரும். அதே வருஷம் ஜூன் மாதம் 2-ஆந் தேதி யன்று பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவரான ஸ்ரீ லான்ஸ்பரி பார்லிமெண்டில் இதைப்பற்றி ஆணித்தரமாய்ப் பேசினார். ஒரு சிறந்த தேசிய வாதியை வேண்டுமென்று துன்புறுத்தும் இந்தச் செய்கையை உலகம் உள்ளளவும் இந்தியர் மறக்க மாட்டார்கள் என்று லான்ஸ்பரி கர்ஜித்தார்.

இரண்டாவதாக, வங்காள ஆள் தூக்கிச் சட்டம் 1930-ல் முடிந்து போய் விடுமென்பது என்ன நிச்சயம்? மீண்டும் அதைச் சர்க்கார் நீட்டிக்கமாட்டார்கள் என்பது என்ன உறுதி? 1930-ல் முடிந்துபோய்விடுமென்று மோபர்லி சொன்னாலும், இன்று வரை அதே ஷரத்துக்களைக் கொண்ட சட்டம் அமுலில் இருந்துகொண்டுதான் வருகிறது. ஆகவே சுபாஷ் போஸ், மோபர்லி சொல்லியபடி ஒப்புக்கொண்டு வெளி நாடு போயிருப்பாரானால், இந்தியாவிற்குத் திரும்பும் காலம் எது என்று சொல்லமுடியாது. இனி, மேல்நாடுகளுக்குப் போய்ச் சிகிச்சை செய்வதென்றால், அதற்குப் பணம் கொடுப்பவர் யார்? கார்ப்பொரேஷன் பிரதம நிர்வாக அதிகாரியா யிருந்தபோது மாதம் 1500 ரூபாய் சம்பளம் சுபாஷ் பெற்று வந்தார். அவரை விசாரணையின்றி ஜெயிலில் போட்டதால், அவருக்கு வேண்டிய அவசியச் செலவுகளுக்குச் சர்க்கார் பணம் கொடுக்கக் கடமைப்பட்டிருந்தது. அப்படியிருந்தும், சுபாஷுக்குச் சர்க்கார் 'அலவன்ஸ்' கொடுக்கவில்லை. சுபாஷை ஜெயிலில் போட்டதால்தான் அவருக்கு க்ஷயரோக வியாதியே வந்தது.

எனவே, இவற்றையெல்லாம் கவனித்தால், சுபாஷை நிபந்தனை யில்லாமல் விடுதலை செய்வதோடு, அவர் பூர்ண சௌக்கிய மடைவதற்குரிய சிகிச்சைச் செலவிற்கும் சர்க்கார் பணம் கொடுக்க வேண்டியவர்களென்றே தோன்றும். சர்க்கார் பணம் கொடுக்கத் தயாரென்று மோபர்லி சொல்லவில்லை. பணத்திற்குச் சுபாஷ்தான் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டுமென்றார். பணத்திற்கும் வழி செய்துகொண்டு, தாய்நாட்டை விட்டு வெளியேறவும் வேண்டுமென்று அன்

ணிய நாட்டாரான மோபர்லி உத்தரவிட்டார். இந்த மானங் கெட்ட நிபந்தனையைச் சுபாஷ் எப்படி ஒப்புக்கொள்ளுவார்? சுபாஷின் தேகநிலைமை மோசமாய்த்தான் இருந்தது. நிபந் தனையை ஒப்புக்கொண்டால்தான் வெளிநாடுபோய்ச் சிகிச்சை பெற முடியும். இல்லாவிடில் மாண்டலேயை விட்டு மீளு வதே சந்தேகம். ஒன்று, நிபந்தனையை ஏற்றுக் கொள்ள வேண்டும்; அல்லது உயிர்த்தியாகம் செய்யவேண்டும். இரண் டில் ஒன்றை முடிவுசெய்யும் பொறுப்புச் சுபாஷைச் சேர்ந்த தாக இருந்தது.

சுபாஷோ மிகவும் துர்ப்பலமாய்ப் படுத்த படுக்கையில் இருந்தார். 'நம் நண்பர்களையும், தாய் தந்தையரையும், சகோதரர்களையும் மீண்டும் பார்க்கப்போகிறோமா' என்ற நினைப்புக்கூட அவருக்குத் தோன்ற ஆரம்பித்தது. அவ் வளவு அபாயகரமான நிலைமையிலிருந்தும், அந்த வீரசிங்கம் கொஞ்சங்கூடக் கலங்கவில்லை. அவர் தம் சகோதரருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார்:—

"கடவுளாகிய அவன் இஷ்டமின்றி அணுவும் அசை யுமா? என்னை எம்மாதிரி செய்ய அவன் நினைத்திருக்கி றானோ அதை மிகவும் அமைதியோடு ஏற்றுக்கொள்ள ஸித்தனாக இருக்கிறேன். நமது பாரத சமுதாயம் முன் னால் செய்த பாவங்களுக்காக நான் பிராயச்சித்தம் செய் வதாய் நினைக்கிறேன். அதனால் நான் அளவற்ற சந்தோஷ மடைகிறேன். நமது எண்ணங்கள் மடியா. நமது லட்சியங் கள் தேசத்தாரின் ஞாபகத்திலிருந்து மறையா. நம் சந்ததி யார் காலத்திலாவது நம் கனவுகள் உண்மையாக மிளி ரும். இந்த நம்பிக்கைகளே நான் படும் கஷ்டங்களிலிருந்து என்னைப் பாதுகாத்துவருகின்றன."

அன்னிய நாட்டில் போய் வாழ்வதைவிட இந்தியச் சிறையில் இறப்பதே மேல் என்று சுபாஷ் தீர்மானித்துவிட்டார். சர்க்கார் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். இச்செய்தி வெளியில் பரவியதும் தேசமெங்கும் கவலை தோன்றியது. சுபாஷின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாய் வருவதாகவும், அவர் பிழைப்பது அரிதென்றும் வதந்திகள் பரவின. நாடெங்கும் சுபாஷின் சௌக்கியத்திற்காகப் பிரார்த்தனைகள் நடந்தன. தேச மக்களுக்கு ஒவ்வொரு நாளும் கவலையோடு கழிந்தது.

வங்காள சர்க்கார் பார்த்தார்கள். இனி, சுபாஷை ஜெயிலில் வைத்திருந்தால் கெட்ட பெயர் ஏற்பட்டுவிடும் என்ற நிலைமை வந்தது. அவ்வளவு தூரம் வியாதி முற்றிவிட்டது. ஆகவே, இந்தியத் துறைமுகத்தைத் தொடுகிற கப்பலில்கூட ஏறாமல் நேராக ஐரோப்பாவுக்குப் போகும் கப்பலில் சீமைக்குப் போகவேண்டுமென்று சொன்ன வங்காள சர்க்கார், சுபாஷை இந்தியாவிற்குக் கொண்டுவந்து, அல்மோராவில் வைப்பதென்று தீர்மானித்தார்கள். 1927 மே 15-ஆந்தேதியன்று அரோண்டா என்ற கப்பல் கல்கத்தாவில் அவுட்ராம் கட்டத்தில் பகல் 12 மணிக்கு வந்து சேருமென்று எதிர்பார்க்கப்பட்டது. அந்தக் கப்பலில் சுபாஷ் போஸைக் கொண்டுவருவதாக முன்பே செய்தி பரவியிருந்தபடியால், ஏராளமாக ஜனங்கள் கூடியிருந்தார்கள். சுபாஷ் பாபுவை எங்கே கொண்டுபோகப் போகிறார்கள் என்ற விஷயம் யாருக்குமே தெரியாது. அவர் தரிசனமாவது கிடைக்காதா என்ற ஆசையுடனேயே ஜனங்கள் கூடியிருந்தார்கள். அல்மோராவிற்குக் கொண்டுபோகும் யோசனையைச் சர்க்கார் வெளியிட

வில்லை. சரியாக 11 மணிக்கு கப்பல் ஆற்றின் மத்தியிலேயே நின்றுவிட்டது. இதன் காரணத்தை அறியாமல் திகைத்திருக்கும்போது, கவர்னரின் நீராவிப்படகு 'குயின்மேரி' அரோண்டாவை நெருங்கியது.

---

## அத்தியாயம் — 6

## பிரிட்டிஷ் சர்க்காருக்குச் சுபாஷின் பதில்

குயின் மேரி யென்னும் படகிலிருந்து சுபாஷின் சகோதரர் சரத் சந்திர போஸ் அரோண்டா கப்பலில் ஏறினர். சிறிது நேரத்திற்குள் ஒரு டோலியில் சுபாஷை வைத்துப் படகிற்குக் கொண்டுவந்தார்கள். அங்கே கவர்னரின் டாக்டரான மேஜர் ஹிங்ஸ்டன், கர்னல் சாண்டிஸ், சர். நீலரத்ன சர்க்கார், டாக்டர். பி. ஸி. ராய் ஆகிய நாலு டாக்டர்களும் சுபாஷைப் பரிசோதித்தார்கள். சுபாஷின் நிலைமை மோசமானதாயிருக்கிறதென்று நாலு டாக்டர்களும் அபிப்பிராயப்பட்டார்கள். அவருடைய பலவீனமான நிலையைப் பார்த்தவர்கள் திடுக்கிட்டுப் போனார்கள். மாலை 3 மணிக்குச் சுபாஷை மேஜர் ஹிங்ஸ்டன் வசம் ஒப்பித்துவிட்டுச் சரத் சந்திர போஸும் மற்ற டாக்டர்களும் படகை விட்டுப் போயினர். அன்றிரவு முழுவதும் படகு நதியிலேயே இருந்தது. தம்மால் கூடியதை யெல்லாம் கவர்னரின் டாக்டர் சுபாஷுக்குச் செய்துவந்தார். மறுநாள் 16-ஆந் தேதி காலையில், சுபாஷ் போஸை எவ்வித நிபந்தனையுமின்றி விடுதலை செய்திருப்பதாகச் சர்க்கார் உத்தரவு பிறப்பித்தார்கள். அவரை ஏற்றுக்கொள்ளும்படி சரத் சந்திர போஸுக்கு ஒரு தந்தி

வந்தது. விடுதலைச் செய்தியைக் கேட்டதும், இந்தியா முழுவதிலும் சந்தோஷம் பரவியது. வெகு சீக்கிரமாகச் சுபாஷ் குணமடைய வேண்டுமென்று நாடெங்கும் பிரார்த்தனைகள் நடைபெற்றன. அச்சமயம் பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் நடந்துகொண்டிருந்தது. அக் கமிட்டி சுபாஷின் விடுதலையைக் கேட்டுச் சந்தோஷமடைந்து அவருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பியது.

சுபாஷ் அபாயகரமான நிலைமையில் இல்லையென்று மார்ச்சு மாதம் 21-ஆம் தேதி, மோபர்லி சட்ட சபையில் சொன்னார். சொல்லி இரண்டு மாதங்கள்கூட ஆகவில்லை. சுபாஷ் இனி பிழைப்பாரா என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆகவே இரண்டு மாதங்களுக்குள், மே மாதம் 16-ஆந் தேதியன்று, அதே மோபர்லி, சுபாஷ் போஸை யாதொரு நிபந்தனையும் இன்றி விடுதலை செய்தார். ராஜீயக் கைதிகளின் தேக நிலைமையைப்பற்றிச் சர்க்காருக்கு எவ்வளவு தூரம் தெரிந்திருந்தது, எவ்வளவு சிரத்தை கொண்டிருந்தார்கள் என்பதற்கு இதைவிட வேறு சிறந்த உதாரணம் காணமுடியாது. இதைபபற்றி மகாத்மா எழுதியபோது, சாகுந் தருணத்தில் சர்க்கார் விடுதலை செய்தது ஒரு கோழைத்தனமான செய்கை என்று சொல்லிக் கண்டித்தார்.

ஜூன் மாதம் 2-ஆம் தேதி யன்று பார்லிமெண்டில் சுபாஷின் விடுதலையைப்பற்றிக் கேள்வி பிறந்தது. இந்தியா உதவி மந்திரியான லார்ட் விண்டர்டன் பதில் சொல்லும்போது வங்காள அவசரச் சட்டக் கைதிகளை யெல்லாம், இரண்டு ஜட்ஜுகள் முன்பு விசாரித்தே ஜெயிலில் அடைப்பதாகச் சொன்னார். இந்தத் துணிச்சலான புளுகைச் சுபாஷால் சகித்

துக்கொண்டிருக்க முடியவில்லை. அவர் மிகவும் பலவீனமா யிருந்தபோதிலும், லார்ட் வின்டர்டனுக்குப் பதில்சொல்லி யாகவேண்டுமென்று நினைத்தார். ஜூன் மாதம் 5-ஆந் தேதியன்று சுபாஷ் போஸ் பின்வருமாறு ஓர் அறிக்கையை விடுத்தார்:—

எனக்குத் தெரிந்தவரையில் ஆள்தூக்கிச் சட்டக் கைதிகளில் எவரும் ஒரு நீதிபதி முன்போ பல நீதிபதிகள் முன்பாகவோ விசாரணை செய்யப்படவில்லை. போலி விசாரணை கூட நடத்தப்படவில்லை. எந்த மாஜிஸ்டிரேட் முன்போ நீதிபதி முன்போ என்னை ஆஜர்செய்யவும் இல்லை. எனது வழக்கு சம்பந்தமாகத் தயாரிக்கப்பட்டனவோ அல்லது புனையப்பட்டனவோவான தஸ்தாவேஜுகள் என்னைக் கைது செய்வதற்கு முன்பு பரிசீலனை செய்யப்பட்டன வென்றோ அல்லது பிறகு பரிசீலனைசெய்யப்படுமென்றோ எனக்குக்கூறவேஇல்லை. நான் கைதியான சிறிது காலத்திற்குப் பிறகு ஒரு போலீஸ் ஆபீசர் என்னைக் கல்கத்தாவிலுள்ள அலிபூர் சென்ட்ரல் சிறையில் கண்டு என்மீது பல 'குற்றச்சாட்டு'களை வாசித்தார். அவை அத்தாட்சியில்லாத புகார்களே தவிரக் குற்றச்சாட்டுகளல்ல. ஆயுதங்களை இறக்குமதி செய்வதற்காகவும், வெடி மருந்துகள் உற்பத்தி செய்வதற்காகவும், போலீஸ் உத்தியோகஸ்தர்களைக் கொலை செய்வதற்காகவும் சதியாலோசனை செய்த கோஷ்டியில் நான் ஓர் அங்கத்தினனென்று குற்றஞ்சாட்டப்பட்டது ஞாபகத்தில் இருக்கிறது. அக் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் கூறும்படி கேட்டபோது, நான் நிரபராதியென்று கூறிக் கோர்ட்டில் என்னை விசாரணை செய்ய வேண்டுமென்று கேட்டேன்.



7. 51 - ரிஷபங்கள் பூட்டிய ரதத்தில் ராஷ்ட்ரபதியின் ஊர்வலக் காட்சி

1925-ஆம் ஞு ஜனவரியில் என்னைப் பெர்ஹாம்பூர் சிறையிலிருந்து மாண்டலே சிறைக்குமாற்றினார்கள். பிப்ரவரி மாதம் வங்க அவசரச் சட்டத்தின்படி என்மீது அதே குற்றச் சாட்டுகளை இரண்டாந்தடவை வாசித்தார்கள். குற்றச்சாட்டு களுக்குப் பதில் கூறும்படி கேட்டபோது, நான் இத்தடவை எழுத்து மூலமாக நிரபராதி யென்பதைத் தெரிவித்தேன். பிறகு நான் என்மீது போலீசார் இவ்விதம் குற்றஞ் சாட்டுவ தற்கு என்ன காரணமென்று சிந்தித்தேன். ஒரு பெரிய போலீஸ் உத்தியோகஸ்தருக்கு என்மீதுள்ள துவேஷமே இவ்விதமான பழிகளுக்கெல்லாம் காரணமென்று நான் நிரூ பித்தேன். போலீசார் என்மீது பொய் வழக்கு ஏற்படுத் தினார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லையாகையால், நான் அதை நிரூபிக்கவேண்டியதைத் தவிர, வீண் பழிக ளுக்குப் பதில் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. ஆகவே நான் குற்றச் சாட்டுகளுக்கு எதுவுமே பதில் கூற மறுத்ததாக லார்டு வின்டர்டன் கூறியது உண்மையல்ல. ஆள் தூக்கிச் சட் டக் கைதிகளுக்கு அவர்களுக்கு விரோதமாகவுள்ள சாட்சியங் களைத் தெரிவித்ததாக ஒரு சமயம் இந்திய சர்க்காரின் உள் நாட்டு மந்திரி கூறியதும் உண்மையே அல்ல.

1926-ஆம் வருஷம் அக்டோபரில் ஒரு போலீஸ் உத்தி யோகஸ்தர் என்னை மாண்டலேயில் கண்டு பேசினார்; சம்பா ஷணையின்போது,எனக்கு விரோதமான தஸ்தாவேஜு சாட்சி யங்கள் இருக்கின்றனவென்று கூறினார். அத்தகைய தஸ்தா வேஜுகளைக் காட்டும்படி நான் அவரை அறை கூவினேன். மேலும் அவர் அத்தகைய சாட்சியம் இருக்கிறதென்று கூறி னால் அவை பித்தலாட்டமாய்த் தயாரிக்கப்பட்டவை யென்று சொல்லுவேனென்று நான் கூறினேன். அதன்மேல் அந்த

அதிகாரி பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஒன்றும் செல்லா தென்று அவர் கருதினார் போலும்!

ஆள் தூக்கிச் சட்டக் கைதிகள் அரசியல் கொலைக் குற்றம் புரிவதில் ஈடுபட்டுள்ளனரென்று லார்டு வின்டர்டன் கூறினார். கடந்த 5 அல்லது 6 வருஷங்களில், 5 கோடி ஜனங்கள் வசிக்கும் மாகாணமொன்றில் அரசியல் கொலை ஒன்றே நடந்தது. அதாவது ஸ்ரீ டே என்பவர் கொலையுண்டார். அக்கொலையைக் கண்டிக்காதவர் ஒருவருமில்லை. இதிலிருந்து பலாத்காரக் குற்றம் செய்தவன் நோக்கம் எவ்விதமாக இருந்தபோதிலும் அத்தகைய குற்றங்களை நிர்வகிக்கச் சாதாரணச் சட்டமே போதியதென்பது நன்கு நிரூபிக்கப்படுகிறது.

சங்கரி டோலா போஸ்ட்மாஸ்டர் சாந்தி சக்கரவர்த்தியும், ராய் பகதூர் பூபேந்திரநாத் சாட்டர்ஜியும் கொலையுண்டது சம்பந்தமாகக் குற்றவாளிகளைக் கைதுசெய்து தண்டனை விதிக்கச் சாதாரண சட்டமே போதியதாகும். இவ்விதமான கொலைகளை ஆர்டினன்ஸ் அல்லது ரெகுலேஷன் போன்ற அவசரச் சட்டங்களைப் பிறப்பிப்பதற்குக் காரணமாகக் கொள்வது அதிகாரிகளுக்கு நேர்மையல்ல.

அரசியல் வழக்குகளில் சாட்சிகளைக் கொலை செய்வதும் மிரட்டுவதும்பற்றி லார்டு வின்டர்டன் பயப்படுவதற்கு ஆதாரமில்லை. போலீசார் அரசியல் சம்பந்தப்பட்டவையென்று கருதிய பல வழக்குகள் பலநாள் கோர்ட்டில் விசாரணை செய்யப்பட்டன. லார்டு வின்டர்டன் பயந்ததுபோல் ஒன்றும் நடக்கவில்லை. முற்றிலும் கண்ணியமற்ற கொள்கையைப் பிரமாதப்படுத்துவதற்காக இவ்வித உபயோகமற்ற காரணங்

களை இந்தியா உதவி மந்திரி கூறிவருவது ஆச்சரியமாகவே இருக்கிறது.

ஒரு மனிதர் முக்கியமான ஸ்தானத்திலிருப்பதாலே அவர் குற்றவாளியென்றோ நிரபராதியென்றோ தீர்மானிக்க முடியாதென்று லார்டு வின்டர்டன் கூறுவதை நான் ஒப்புக் கொள்கின்றேன். சொந்த அந்தஸ்திலோ அல்லது பொது வாழ்க்கையிலோ நான் வகிக்கும் ஒரு ஸ்தானத்தால் என்னைச் சட்டம் பாதிக்கக்கூடாதென்று நான் கோரியதே இல்லை. சட்டத்தின்முன் எல்லோரும் சமம்; அப்படியே இருக்க நாங்கள் விரும்புகின்றோம். 1921-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் சட்டத்தை மீறியதுபோல், நாங்கள் சட்ட மறுப்புச் செய்வோமானும் பகிரங்கமாகவே செய்து பலாபலன்களை ஏற்றுக் கொள்வோம். இந்த வழக்கில் நாங்கள் சட்டத்தை மீற வில்லை; இந்திய பீனல் கோடின் எந்த ஷரத்துக்கும் விரோதமாகவும் நடக்கவில்லை. ஆகவே, நாங்கள் புரட்சியில் ஈடுபட்டதற்காக எங்களைச் சிறைப்படுத்தவில்லை யென்றும், பகிரங்கமான முறைகளைக் கையாளும் ஒரு பலமான அரசியல் ஸ்தாபனத்தை நிலைநிறுத்தும் செயலுக்காகவேதான் சிறைப் படுத்தப்படுகிறோமென்றும் கருதுவது இயல்பாகும்.

ஆள்தூக்கிச் சட்டக் கைதிகளின் விடுதலைப் பேச்சு ஏற்பட்டபோதெல்லாம் சிலர் ஓர் உடைந்த சுழல் துப்பாக்கியுடன் முன்வருவது, அல்லது ஒரு வெடிகுண்டை எடுத்துக் கைதியாக்க முற்படுவது இவை தவிர, கடந்த சில வருஷங்களாகவும், நிச்சயமாகக் கடந்த 12 மாதங்களாகவும் இம்மாகாணத்தில் புரட்சிக் குற்றமே நிகழவில்லை. லார்டு வின்டர்டனின் பிரசங்கத்தைப் படித்தால் அவர் வேண்டுமென்றே

உண்மைக்கு மாறான விஷயங்களைக் கூறி வருகிறாரென்றோ, வங்காள அதிகாரிகள் அவருக்கு முற்றிலும் தவறான செய்திகளை அனுப்பி வருகின்றார்களென்றோதான் கருதவேண்டியிருக்கிறது. உண்மை எதுவானாலும் நமக்கு ஆறுதலோ பலனோ இல்லை.

---

## அத்தியாயம் — 7

## சென் குப்தா - சுபாஷ் போட்டி

**1928**-ஆம் வருஷ ஆரம்பத்திலேயே சுபாஷ் பொதுஜன வேலைக்குத் திரும்பிவிட்டார். அவர் திரும்பிய காலத்திலிருந்து வங்காளக் காங்கிரஸ் இரண்டு பட்டுவிட்டது. தேசபந்து தாஸின் காலத்தில் சென் குப்தாவும், சுபாஷும் தேசபந்துவுக்கு இருகரங்களாய் விளங்கினார்கள். அவர் மறைந்த பின்பு, வங்காளத்தின் காங்கிரஸ் தலைவர் யார் என்ற பிரச்னை கிளம்பியது. சுபாஷ் போஸ் ஜெயிலில் இருந்தார். சென் குப்தா தலைவரானார். சென் குப்தாவும் அரிய தியாகஞ்செய்த பெரிய தேசபக்தர்தான். இரண்டாவது சட்ட மறுப்பு 1932-ல் ஆரம்பமாயிற்றே, அதில் கைதியானவர், அதன் பின்பு சுதந்தர வீரராய் வெளி வரவேயில்லை. பந்தோபஸ்தில் இருக்கும்போதே உயிர் துறந்தார். “இந்த நாட்டின் வீரர்களுக்கெல்லாம் அவர் வீரர்” என்று ஜவாஹர்லால் அவர் மரணத்தைக் கேள்விப்பட்டதும் கூறினார். அத்தகைய சென் குப்தாவுக்கும் சுபாஷுக்கும் சண்டை ஏற்படுவதென்றால், அந்த வங்காளத்தின் துரதிர்ஷ்டம் என்று சொல்லுவதைத் தவிர வேறு எதுவும் சொல்லுவதற்கில்லை.

ஒரு மாகாணத்திற்கு ஒருவரே தலைவராயிருக்கவேண்டும். இரண்டு பேர் சகல அம்சங்களிலும் பொருத்தமானவர்களா யிருந்தாலும், யாராவது ஒருவர் விட்டுக்கொடுத்துத்தான் ஆக வேண்டும். அப்படி ஸமரஸமாய்ப் போகும் இடங்களில்தான் காங்கிரஸ் வேலைகள் ஊக்கத்தோடு நடக்க முடியும். காங்கிரசுக்கும் அதிக பலம் ஏற்படும். இரண்டு தலைவர்களும் போட்டி போடுவதென்று ஏற்பட்டால் காங்கிரசின் பலம் குறையும். வங்காளக் காங்கிரஸ் பலம் குறைந்திருப்பதற்கு இந்தச் சண்டைதான் காரணம்.

தேசபந்துவுக்குப் பின்னால், சென் குப்தா தலைவரானார். சுபாஷ் விடுதலையாகி வந்ததும், சுபாஷைச் சேர்ந்தவர்கள் அவரைத் தலைவராக்க முயன்றார்கள். இதனால், வங்காளத்தில், சென் குப்தா கட்சி, போஸ் கட்சி என்று இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. காங்கிரஸ் தேர்தல்முதல் சகல தேர்தல்களிலும் இரண்டு கட்சிக்கும் பலத்த போட்டி ஏற்பட்டது. சுபாஷ் கோஷ்டியை 'பார்வேர்ட்' (லிபர்ட்டி) பத்திரிகை ஆதரித்தது. சென் குப்தா கோஷ்டியை ஆதரிக்க 'அட்வான்ஸ்' தோன்றியது. இரண்டு பத்திரிகைகள் செய்யும் பிரசாரமும், பிற மாகாணத்தாருக்கு மிகுந்த மனக் கஷ்டத்தை உண்டுபண்ணுவதா யிருக்கும். 1927-ஆம் வருஷத்தில் கல்கத்தா கார்ப்பொரேஷன் மேயராகச் சென்குப்தா இருந்தார். 1928 ஏப்ரல் 2-ஆம் தேதி மேயர் தேர்தல் நடந்தது. சுபாஷ் போட்டி போடுவதா யிருந்தபடியால் சென்குப்தா விலகிக் கொண்டார். பி. கே. பாசு என்ற மிதவாதியும், சுபாஷும் போட்டி போட்டனர். பாசுவுக்கு 46 வோட்டுகளும் சுபாஷுக்கு 37 வோட்டுகளும் கிடைத்தன. சுபாஷ்

தோல்வி யுற்றார். உடனே மின்சார விளக்குகள் அணைந்தன. சுபாஷுக்கு விரோதமாக வோட் கொடுத்த சிலருக்கு அடியும் கிடைத்தது. இந்தச் செய்கைகளுக்கு யார் காரணமா யிருந்தாலும் சரி; சென் குப்தாவுக்கும், சுபாஷுக்கும் கட்சி ஏற்பட்டதால்தான் ஒரு மிதவாதி மேயராக வர முடிந்ததென்பதும், அந்தச் சம்பவத்திலிருந்து கட்சிச்சண்டைகள் பலத்துவிட்டன என்பதும் மறுக்க முடியாத உண்மைகள். காங்கிரஸ் கமிட்டித் தேர்தல்களில் ஏற்பட்ட போட்டி, காரியக்கமிட்டி வரையில் வரும்படி நேரிட்டது. போட்டியில் முடிவு கூறும் வேலையை ஸ்ரீ ஆனேக்குக் காரியக்கமிட்டி கொடுத்தது. ஆனால் எவ்வளவோ முயன்றும் பலிக்கவில்லை. சுபாஷ் போஸ் கல்கத்தா மேயராய் வந்த பின்புங்கூட இந்தக் கட்சிச் சண்டை ஓயவில்லை. சென் குப்தா இறந்தபின்பாவது ஓய்ந்ததா என்றால் அதுவுமில்லை. சென் குப்தாவிற்குப் பின்னால் அவர் கட்சி, டாக்டர் ராய் கட்சியாக மாறியது. இன்று வரையில் கட்சிச் சண்டைகள் போகவில்லை. சுபாஷ் போஸ் ராஷ்ட்ரபதி ஆய்விட்டபடியாலும், இதுவரை வங்காளத்தில் இருந்த கட்சிபேதங்களால் மிகுந்த அனர்த்தங்கள் நேர்ந்துவிட்டபடியாலும், கட்சி பேதங்களை ஒழித்துச் சமரஸத்தை உண்டுபண்ண மகாத்மா முயற்சி செய்து வருகிறார். அவருடைய முயற்சியால் வங்காளத்தில் ஒற்றுமை ஏற்படுமென்று நம்புவோமாக.

இந்தியாவின் தேசிய இயக்கத்திற்கு வங்காளத்தைத் தாயகமாகக் கொள்ளலாம். இந்தியாவெங்கும் தேசபக்தியை ஊட்டிய வந்தேமாதர கீதம் அங்கேதான் தோன்றியது. 1906-ஆம் வருஷத்தில் சுயராஜ்யம் வேண்டும் என்ற வீரத்

தொனியைக் கிளப்பியது வங்காளந்தான். தேசத்திற்காக உயிர்த்தியாகம் செய்ய முதலில் துணிந்தவர்கள் வங்காளிகளே. அவ்வளவு சிறந்த வங்காளத்தில், கட்சிபேதம் ஏற்படுவதென்றால், அதைக் கண்டு யார்தான் வருத்தப்படாமல் இருக்கமுடியும்?

சென் குப்தாவும் சுபாஷும் சிறந்த தேசபக்தர்களாயிற்றே, இருவரும் சமரஸமாய்ப் போனாலென்ன என்று சிலர் கேட்கலாம். சாதாரண மனிதர்கள் சமரஸமாய்ப் போய்விடலாம். ஆனால் நுண்ணிய அறிவும், உறுதியுமுள்ளவர்கள் சமரஸமாய்ப் போவது கஷ்டந்தான். ஒவ்வொருவரும் தாம் செய்யும் வேலையில் முன்னணியில் நிற்கவேண்டுமென்று விரும்புவது இயற்கையே. இந்த அவாவை அடக்கி ஆளுபவர்கள் அரிது. மேலும், காங்கிரஸ் சேவையில் அவர்கள் பெறும் கைம்மாறு என்ன? புகழைத் தவிர வேறெதுவும் இல்லை. அந்தப் புகழுக்காகவே, அந்தப் புகழால் ஏற்படும் சந்தோஷத்திற்காகவே, துணிந்து உயிரையும் தேசப்பணியில் ஈடுபடுத்துகிறார்கள். அந்தத் திருப்திகூட இருக்கக்கூடாதென்றால், உற்சாகத்துடன் உழைப்பதற்கு ஒரு லக்ஷ்யமே இல்லாமல் போய்விடும். தங்களுக்குப் புகழ்வேண்டும் என்பதற்காகத் தேசத்தைக் காட்டிக் கொடுத்தால், அப்பொழுதுதான் 'சுயநலம்' என்ற அவச்சொல் வந்துசேரும். அது இல்லாத வரையில், போட்டிபோடுவது குற்றமல்ல. அதைத் தடுக்கவும் முடியாது. லார்ட் பர்க்கென்ஹெட்டும், சர். ஜான் சைமனும் பள்ளித் தோழர்கள். இருவரும் மகா புத்திசாலிகள். என்றாலும் இருவருக்கும் ஒரே கட்சியில் இடமில்லையென்பதைக் கண்டார்கள். எனவே பர்க்கென்ஹெட் கன்சர்வேடிவ் கட்சியிலும், சைமன் லிபரல்

கட்சியிலும் சேர்ந்தார். இந்தியாவின் நிலைமையோ இங்கிலாந்தைப் போன்றதல்ல. இந்தியா அடிமை நாடு. தேசபக்தியுள்ளவர்கள் இங்கே எதிர்க்கட்சியில் சேரமுடியாது. சுபாஷும், சென் குப்தாவும் காங்கிரஸ் ஒன்றில்தான் இருக்கமுடியும்; அப்படியே இருந்தார்கள். அவர்களுடைய போட்டி எல்லை கடந்து, காங்கிரஸ் வேலைகளைக் கெடுக்காதபடி அவர்கள் நடந்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால், வங்காளத்தின் நிலைமை இன்னம் சிலாக்கியமாக இருந்திருக்கும். ஆனால் யாருடைய சாபத்தாலோ அந்தப் போட்டி எல்லை கடந்து வளர்ந்துவிட்டது.

---

## அத்தியாயம் — 8

## சுயராஜ்யம் பெறும் வழி

சுபாஷ் போஸ் விடுதலையாகி ஒரு வருஷமாவதற்குள் பூர்ண சௌக்கியம் அடைந்துவிட்டதைக் கண்டு எதிரிகள் ஆச்சரியமடைந்தனர். இனிப் பிழைப்பது அரிது என்ற நிலைமையில் அவரை விடுதலை செய்தும், அவர் பிழைத்துவிட்டார்! அது மட்டுமல்ல; அவருடைய செல்வாக்கும் மலைபோல் வளர்ந்துகொண்டு போகிறது! இந்த இரண்டையும் கண்டு எதிரிகள் வயிறு எரிந்தனர். மகாத்மாவின் ஸ்தானத்திற்குச் சுபாஷ் வந்துவிடுவார் என்றுகூட மேல்நாட்டுப் பத்திரிகைகள் ஜோசியம் சொல்லிக்கொண்டிருந்தன. மகாத்மா காங்கிரசில் தீவிரமாய்க் கலந்துகொள்ளாமல் விலகியிருந்த சமயம், ஜவாஹர்லால் ஐரோப்பாவில் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு அவ்வருஷத்தில்தான் இந்தியாவிற்கு வந்தார். சென்னை

யில் கூடிய காங்கிரஸ் பூர்ண சுயராஜ்யம் வேண்டுமென்று தீர் மானம் செய்தது. சைமன் கமிஷன் நியமனம் மிதவாதி களுக்குக்கூடக் கோபத்தை உண்டுபண்ணியது. "இந்தியர் களாகிய உங்களால் ஓர் அரசியல் திட்டம் தயார்செய்ய முடியுமா?" என்று லார்ட் பர்க்கன்ஹெட் (இந்தியா மந்திரி) அகம்பாவத்தோடு கேட்டார். இதற்குப் பதில் அளிப்பதற் காகவே சர்வகட்சி மகாநாடு கூடியது.

இவ்வளவு காரியங்களும் சேர்ந்து, 1928-ஆம் வருஷ ஆரம்பத்தில் இந்தியாவில் பெரிய உணர்ச்சியை உண்டுபண் ணின. பிப்ரவரி மாதம் 3-ஆந் தேதி யன்று சைமன் கமி ஷன் பம்பாய் வந்து இறங்கிற்று. இந்தியா முழுவதும் அன்று பூர்ண ஹர்த்தால் நடைபெற்றது. "சைமனே திரும்பிப் போ" என்ற குரல் பம்பாயில் பேரொலியாய்க் கிளம்பிற்று. லார்ட் பர்க்கென்ஹெட்டின் துடுக்கான பேச்சுக்கள் இந்தி யருக்கு அதிக உணர்ச்சி ஏற்படும்படி செய்தன. சுபாஷ் போஸ் அந்தச் சந்தர்ப்பத்தில்தான் பூர்ணசௌக்கியமடைந்து வெளிவந்தார். அவர் ஜெயிலில் இருக்கும்போதே, 1926-ல் வங்காள சட்ட சபைக்கு ஓர் அங்கத்தினராய்த் தேர்ந் தெடுக்கப்பட்டார். என்றாலும், சட்ட சபையில் முட்டுக் கட்டை போடும் போராட்டத்தால் பயனில்லை என்பது அதற்கு முன்பே தெரிந்துபோய் விட்டபடியால், சட்ட சபை வேலையில் சுபாஷுக்குக் கவர்ச்சி உண்டாகவில்லை.

மறுபடியும் சட்ட மறுப்பு ஆரம்பிக்க வேண்டுமென்ற எண்ணம் தேசமெங்கும் பரவிவந்தது. சர்க்காருடன் நேரடி யாகப் போர் செய்யக்கூடிய வழியைக் காட்டவேண்டுமென்று ஜனங்கள் தவித்துக் கொண்டிருந்தபடியால், சுபாஷ் வெளி

வந்ததும் புதிய நம்பிக்கை உண்டாயிற்று. தமது ராஜீய அபிப்பிராயங்களைச் சுபாஷ் கொஞ்சங் கொஞ்சமாக வெளி யிட்டு வந்தார். அவருடைய அபிப்பிராயத்தை அறிய வாலி பர்களும், தொழிலாளர்களும் ஆவலோடு காத்திருந்தார்கள். 1928 மே 3-ஆந்தேதி யன்று நடந்த மகாராஷ்டிர மாகாண மகாநாட்டிற்குச் சுபாஷ் தலைமை வகித்தார். அதில் அவர் பேசிய விஷயங்கள் அவருடைய தீவிரமான போக்கை வெளிப் படுத்தின. பூர்ணசுயராஜ்யம் வேண்டுமா, குடியேற்ற ஆட்சி யே போதுமா என்று பலமாக விவாதிக்கப்பட்ட அவ்வரு ஷத்தில், பூர்ண சுயராஜ்யமே வேண்டும், அதுவும் சமஷ்டிக் குடியரசா யிருக்கவேண்டுமென்று சுபாஷ் கூறியது முக்கிய மானது. பெடரேஷன் என்ற சமஷ்டிக் கொள்கையையாவது ஒப்புக்கொள்ளவேண்டுமென்று லார்ட் லோதியன் சில வாரங் களுக்கு முன்னால் சொன்னார். கொள்கையைப் பொறுத்த வரையில் பத்து வருஷங்களுக்கு முன்பே அதற்கு ஆதரவு இருந்ததை, சுபாஷின் பிரசங்கத்திலிருந்து அறிந்துகொள்ள லாம். சமஷ்டியைப்பற்றி லார்ட் லோதியன் சிபார்சு செய்யவேண்டிய அவசியமேயில்லை. தற்காலம் பிரிட்டிஷ் சர்க்கார் கொடுப்பது பெடரேஷனா என்பதே கேள்வி. இது உண்மையான பெடரேஷன் அல்ல என்பதை லார்ட் லோதி யன்கூட மறுக்க முடியாது. மகாராஷ்ட்ர மகாநாட்டில் சுபாஷ் பேசிய பேச்சுக்களில் சில முக்கியமான பாகங்களைக் கீழே கொடுக்கிறோம் :—

ஜனநாயகம் என்பது மேல் நாட்டாரின் உற்பத்தி என்றும், முழு ஜனநாயகத்தையோ அரைகுறை ஜனநாயகத் தையோ இந்தியா ஒப்புக்கொள்ளுவதென்பது மேல் நாட்டு

நாகரிகத்தை இந்தியா பின்பற்றுவதாகுமென்றும் சிலர் சொல்லுகின்றனர். லார்ட் ரொனுல்ட்ஷே (ஜெட்லண்ட்) போன்றவர்கள், கீழ்நாட்டாரின் சுபாவத்திற்கு ஜனநாயகம் பொருத்தமானதல்லவென்றும், ஆகவே இந்தியாவின் அரசியல் அமைப்பை அந்த வழியில் அமைக்கக் கூடாதென்றும் கூறுகிறார்கள்.

இதைவிடப் பெரிய அறியாமை வேறில்லை. ஜனநாயகம் என்பது மேல் நாட்டில் உற்பத்தியானதல்ல; அது மனித சமூகத்தைச் சேர்ந்த ஸ்தாபனம். அரசியல் அமைப்புகளைச் சிருஷ்டிக்க மனிதசமூகம் முயற்சி செய்த காலங்களிலெல்லாம், ஜனநாயகம் என்ற இந்த அதிசயமான வழியில் வந்து சேர்வது வழக்கம். இந்தியாவின் பழைய சரித்திரத்தைப் பார்த்தால், ஜனநாயக அமைப்புகள் ஏராளமாய் இருந்ததை அறியலாம். 81 குடியரசுகள் இந்தியாவில் இருந்ததை, கே. பி. ஜெயஸ்வால் தமது புத்தகத்தில் காட்டியிருக்கிறார். உயர்ந்த ராஜரிகம் இருந்ததைக் காண்பிப்பதற்கு அறிகுறியாக, அவைகளைக் குறிப்பிடும் வார்த்தைகள் இந்திய பாஷைகளில் மலிந்து கிடக்கின்றன. இன்றும் இந்தியாவின் சில பாகங்களில் ஜனநாயக ஸ்தாபனங்கள் இருந்துவருகின்றன. அஸாமில் காஸிஸ் வகுப்புகள், தங்கள் தலைவரை வோட்மூலம் தேர்ந்தெடுக்கும் வழக்கம் பரம்பரையாக இருந்துவருகிறது. கிராமப்பஞ்சாயத்து அமைப்புகளில் ஜனநாயகக்கொள்கையே கைக்கொள்ளப்பட்டிருந்தது. முன்காலத்தில் நகர நிர்வாகம் எப்படி ஜனநாயக முறையில் நடைபெற்று வந்தது என்பதைக் காட்டும் விஷயங்கள் ராஜஷாஹி மியூஸியத்தில் உள்ள ஒரு செப்புச்சாஸனத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

ஜனநாயகம் மட்டுமல்ல. தீவிரமான இதர ராஜீயக் கொள்கைகள்கூட இந்தியாவில் முன்பு இருந்திருக்கின் றன. பொதுவுடைமை என்பதுகூட மேல்நாட்டாரின் உற் பத்தி யல்ல. அஸாமிலுள்ள காஸிஸ் வகுப்பினருள் இன்று கூடத் தனிப்பட்டவர்களுக்குச் சொத்துக்கள் இல்லை. நிலங் கள் எல்லாம் சமூகத்தைச் சேர்ந்தவை. இதைப் போல இன் னம் எத்தனையோ ஆதாரங்களைக் காட்டலாம். வெவ்வேறு காலங்களில் தோன்றும் வெவ்வேறு குறைகளுக்குப் பரிகார மாகக் கண்டுபிடிக்கப்படும் வழிகள்,எல்லா நாடுகளிலும் ஒன்றா கவே இருந்து வந்திருக்கின்றன. ராஜீய வளர்ச்சி யென்பது வட்டமாய்ச் சுற்றிவருவது வழக்கமென்று பல நூற்றாண்டு களுக்கு முன்பே கிரேக்க தத்துவ ஞானிகள் கூறியிருக்கி றார்கள். அதாவது கோனாட்சிக்குப் பின்னால் பணக்காரர் ஆட்சியும், அதற்குப் பின்னால் ஜனநாயகமும் நிலவுதல். ஜன நாயகத்தில் சில சமயங்களில் புரட்சி ஏற்படுவதுண்டு. அப் படி ஏற்பட்டால் மீண்டும் கோனாட்சி ஏற்படும். அப் புறம் மறுபடியும் ஜனநாயகத்தில் வந்து முடியும். மேற்படி கொள்கையை, பொதுவாய் ஒப்புக்கொள்ளுவதென்றால், அது ஐரோப்பாவுக்கு மட்டுமல்ல, உலகம் முழுவதற்குமே பொருந்தும். உலகிலுள்ள புராதன நாகரிகப் பெருமை நமக்கும் உண்டு. ஆகவே நமது நாட்டிலும் பல்வேறு அர சியல் அமைப்புகள் தோன்றி அழிந்ததுண்டு. பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு சில நூற்றாண்டுகளில், கோன் ஆட்சி வேண்டுமென்ற அபிப்பிராயம் இந்தியாவில் இருந்த தைக்கொண்டு, இந்தியாவிற்கு ஜனநாயக ஆட்சிமுறை புதிது என்று சொல்லிவிட முடியாது.



8. விட்டல்பாய் படேல் மரணத்தறுவாயில் தொண்டு புரியும் சுபாஷ்

## ஸ்வதேச உணர்ச்சியும், சர்வ தேச உணர்ச்சியும்

ஸ்வ தேசாபிமானத்தைப் பல கோஷ்டியார் வெவ்வேறு காரணங்களுக்காக எதிர்க்கிறார்கள். சர்வ தேச கலாசார நிலைமையிலிருந்து பார்க்கும்போது ஸ்வதேசாபிமானமாகிய தேசியம் குறுகிய நோக்கமுடையதாகவும், சுயநலம் உள்ளதாகவும் இருப்பதாய்ச் சொல்லுகிறார்கள். சர்வதேச கலாசார ஒற்றுமைக்குத் சுதேசியம் குறுக்காய் நிற்பதாயும் கூறுகிறார்கள். இந்திய தேசீய உணர்ச்சி குறுகிய நோக்கமோ, சுயநலமோ, வஞ்சமோ கொண்டதாயில்லை யென்று அவர்களுக்கு நான் பதில் கூறுகிறேன். அது மனித சமூகத்தின் உயர்ந்த லட்சியங்களால் தூண்டப்படுவது. சத்தியம், சிவம் (நன்மை), சுந்தரம் (அழகு) இவையே அதன் லட்சியங்கள். இந்தியாவில் வளரும் தேசீய உணர்ச்சி, உண்மை, நாணயம், ஆண்மை, தியாகம், சேவை ஆகிய அருங்குணங்களை நமக்கு ஊட்டிவருகிறது. ஆக்க வேலையில் நமக்குள்ள திறமையை அது கிளப்பியிருக்கிறது. அதனால் இந்தியக் கலைகள் மீண்டும் புத்துயிர் பெறுவதை நாம் காண்கிறோம். சுதந்திரம் என்ற ஆசை தோன்றியிராவிட்டால், நமது கலைகளும், கலாசாரமும் என்ன கதி யடைந்திருக்கும்?

உலகிலுள்ள கலைகளுக்கும், கலாசாரங்களுக்கும் அடிப்படையான ஒற்றுமை இருக்கிற தென்றாலும், அவற்றில் எத்தனையோ வகைகள் இருக்கின்றன. இந்த வகைகளைத் தனித்தனியாக வளரவிட்டால்தான் மனித நாகரிகம் செழிப்புள்ளதாகும். ஆகவே கலையையோ கலாசாரத்தையோ ஸ்வதேசாபிமானம் குறைக்காது; அவற்றை விருத்தியே செய்யும். தவிரவும் நமது பழங்காலக் கொள்கைப்படி கலையையும்

கலாசாரத்தையும் வளர்க்கவேண்டுமானல், முதலில் அன்னியக்கொள்கைகளிலிருந்து நாம் விடுபட வேண்டும்.

## பொதுவுடைமைக்காரர் தவறு

சர்வதேசத் தொழிலாளரும், பொதுவுடைமைக்காரர்களும் ஸ்வதேசியத்தை எதிர்க்கிறர்கள். இவர்களின் எதிர்ப்பு புத்தியற்றது. நம்மை ஆளும் அன்னிய நாட்டாருக்கு அந்த எதிர்ப்பு உதவியளிக்கிறது. அபேதவாத முறையிலோ வேறு எந்த முறையிலோ நாம் பிற்காலத்தில் சர்க்கார் அமைப்பதாயிருந்தாலும், அப்படி அமைக்கும் உரிமையை நாம் முதலில் பெறவேண்டும் என்பதைச் சாதாரண மனிதன் கூட அறிவான். ஆகவே இந்தியாவுக்கு ராஜீய விடுதலை சீக்கிரம் கிடைக்கும்படி முயலவேண்டிய கடமை தேசீய வாதிகளுக்கு மட்டும் உரியதென்பது சரியன்று; தேசீயத்திற்கு விரோதமாயிருக்கும் பொதுவுடைமைக்காரர்களுக்கும் அது கடமையாகும். ராஜீய விடுதலை கிடைத்த பின்புதான் எம்மாதிரி அரசியல் அமைப்பை ஏற்படுத்தவேண்டுமென்பதை யோசிக்கத் தகுந்த காலம் ஏற்படும். பிறநாடுகளிலுள்ள பொதுவுடைமைக்காரர்களின் அபிப்பிராயமும் இதுதான். முதலாளி—தொழிலாளி சண்டை வந்துதான் ஆகவேண்டுமென்று பகிரங்கமாய்ப் பேசியோ, வேலை செய்தோ தற்சமயம் பிளவுகள் ஏற்படுத்துவது ஸ்வதேசீயத்திற்கு விரோதமான ஒரு பெரிய குற்றமாகும். கார்ல் மார்க்ஸ், பாக்குனின் என்பவர்களின் கொள்கைகளை அரைகுறையாகப் படிப்பதால் என்ன அனர்த்தம் நேரிடுகிறது தெரியுமா? சர்வ தேச உணர்ச்சி என்று சொல்லிக்கொண்டு, அன்னிய நாட்டுத் துணிகளை வாங்கவேண்டுமென்று சில தொழிலாளர்

கள் பகிரங்கமாய்ப் பிரசாரம் செய்யும் நிலைமை வந்திருக்கிறது.

ஸ்வதேசாபிமானம், சர்வ தேசாபிமானத்திற்கு எந்த வகையிலும் விரோதமுள்ளதல்ல. சர்வ தேசாபிமானத்தில் எனக்குள்ள நம்பிக்கை வேறு யாருடைய நம்பிக்கைக்கும் குறைந்ததல்ல. ஆனால் தனியான கலாசாரங்களை வளரும்படி செய்து, தனி சமுதாயங்கள் ஏற்படும்படி செய்து அவற்றின் மூலமாகவே சர்வ தேச அரசியலையோ கலாசாரத்தையோ கவனிக்க முடியுமென்பதே எனது நம்பிக்கை. கலாசாரங்களின் சமஷ்டியும், சமுதாயங்களின் சமஷ்டியுமே சர்வ தேசாபிமானம் என்பதே எனது கொள்கை. நமது கலாசாரங்களை வளர்த்து, நமது நாடு விடுதலையடையும்படி செய்தால், சர்வ தேசீய உணர்ச்சிக்கு நமது நாட்டைப் பொருத்தமுள்ளதாகச் செய்யமுடியும். இந்தியா உலகத்திற்கே சிகரமாய் விளங்குகிறது. உலக முழுவதையும் பாதிக்கும் குறைகளுக்கு இந்தியா மூலமாக ஒரு பரிகாரம் கண்டுபிடிக்க முயலுகிறார்கள். இந்தியாவிலுள்ள கலாசாரங்கள் ஐக்கியமடைந்து, மாகாணங்களும் ஸம்ஸ்தானங்களும் சுயாட்சி பெற்றுச் சமஷ்டியில் சேருமானால், உலகிலுள்ள பல நாடுகளுக்கு அது வழிகாட்டியாயிருக்கும்.

## நமது லட்சியம் என்ன?

நமது எதிர்காலம் எப்படி யிருக்கவேண்டும்? பூர்ண விடுதலை பெற்ற சமஷ்டிக் குடியரசையே நான் விரும்புகிறேன். இதுதான் எனது முடிவான லட்சியம். தன்னுடைய காரியங்களுக்கு இந்தியா தானே எஜமானனா யிருக்கவேண்டும். மற்ற நாடுகளோடு ஒன்றுகி நிமிர்ந்து நடக்கும்பொருட்டு

கொஞ்சங்கூடப் பந்தமில்லாத விடுதலையையே இந்தியா பெறவேண்டுமென்று விரும்புகிறேன். தனக்கும், உலகத்தாருக்கும் உபயோக மாகும்படி நல்ல விஷயங்களை இந்தியா உற்பத்தி செய்வதனால் ஏற்படும் ஆனந்தத்தைப் பெறுவதற்காக இந்தியா பூர்ண விடுதலை பெறவேண்டுமென்று விரும்புகிறேன். எல்லா நாடுகளிலும் தனது ஸ்தானாதிபதிகளை இந்தியா நியமிக்கவும், சொந்தப் படையும் கடற்படையும் பெறவும், சொந்தக் கொடியைப் பறக்கவிடவும் வேண்டுமென்றும் நான் விரும்புகிறேன்.

விடுதலையே எனக்கு ஆதியும் அந்தமும். விடுதலை விலை மதிக்க முடியாத பொக்கிஷம். சுவாசப்பைக்குக் காற்று எப்படி அவசியமோ, அப்படியே, ஆத்மாவுக்கு விடுதலை அவசியம். "விடுதலை என்பது ஆத்மாவின் கீதம்" என்று சுவாமி விவேகானந்தர் எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறார்! விடுதலையே உண்மையான அமிர்தம்!

குடியேற்ற ஆட்சியைக் கொண்டு இந்தியா திருப்தி அடைய முடியாது. எதற்காகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் நாம் இருக்கவேண்டும்? இந்தியாவில் எல்லா வளங்களும் இருக்கின்றன. இந்தியா அறிவுவராத குழந்தையைப்போல இருக்கும்படியான நிலைமை வெள்ளையர் பலவந்தமாய்ச் சுமத்தி வந்தனர். அதிலிருந்துகூட இந்தியா வளர்ந்துவிட்டது. இப்போது அது தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்ளமுடியும்; ஒரு சுதந்திர நாடாக இருக்கவும் முடியும். இந்தியா கானடாவல்ல; அல்லது ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்காவுமல்ல. இந்தியர் கீழ்நாட்டார். மேல்நாட்டாராகிய பிரிட்டிஷாருக்கும் நமக்கும் ஒற்றுமை யிருக்கக் கூடிய விஷயம் எதுவும் கிடையாது. ஆகவே பிரிட்டிஷ்

ஏகாதிபத்தியத்தில் இந்தியா இருப்பதற்கு அவசியமே கிடையாது. அதில் இருப்பதால் இந்தியாவிற்கே நஷ்டம். வெகுகாலமாய் இருந்துவிட்டதால் பிரிட்டனுடன் வைத்திருக்கும் நட்பில் தனக்குள்ள சிறுமைப்பித்தை நீக்குவதென்பது இந்தியருக்குக் கஷ்டமாய்த் தோன்றலாம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இருக்கிறவரையில், இந்தியாவைப் பிரிட்டிஷார் சுரண்டுவதைத் தடுப்பதும் கஷ்டமாகவே இருக்கும்.

## யாவற்றிலும் ஜனநாயகம்

சுதந்திரம் அடைய நாம் முயற்சி செய்யும்போது, அதனால் ஏற்படும் சகல விதமான விளைவுகளையும் கவனிக்க வேண்டும். உங்கள் ஆத்மாவில் ஒரு பாதிக்கு விடுதலை கொடுத்து, மற்றொரு பாதியை அடக்கிவைக்க முடியாது. ஓர் அறையில் வெளிச்சம் போட்டால், அறையிலுள்ள சில பாகங்களுக்கு வெளிச்சம் போகக் கூடாதென்று தடுக்க முடியாது. அரசியலில் ஜனநாயகத்தை ஏற்படுத்திவிட்டு, அதே சமயத்தில், சமூகவாழ்க்கையில் ஜனநாயகக் கொள்கை பரவாமல் உங்களால் தடுக்க முடியாது. இம்மாதிரியாக அரசியலில் ஜனநாயகமும், சமூகத்தில் பிற்போக்கும் கொண்ட ஒரு விசித்திரக் கலப்பாக நாம் இருக்க வேண்டாம். சமூக வாழ்க்கையிலிருந்துதான் அரசியல் ஸ்தாபனங்கள் வளர வேண்டும். சமூக அபிப்பிராயங்களும் லட்சியங்களுமே அவைகளை உருப்படுத்துகின்றன. இந்தியாவை உண்மையிலேயே ஒரு மகத்தான நாடாக்க நாம் விரும்புவோமானால், ஜனநாயக சமூகத்தின்மீது நமது ஜனநாயக அரசியலை அமைக்க வேண்டும். பிறப்பினாலும், வளர்ப்பினாலும், ஜாதியினாலும், மதத்தினாலும் ஏற்பட்டிருக்கும் உயர்வு தாழ்வுகள்

மறையவேண்டும். எல்லா வகுப்பாருக்கும் எல்லா விஷயங்களுக்கும் உரிய சந்தர்ப்பங்களைக் கொடுக்கவேண்டும்.

பெண்களின் அந்தஸ்தை உயர்த்தி, ராஜீயத்தில் அவர்கள் அதிகப் பங்கெடுக்கும்படி அவர்களைப் பழக்கவேண்டும். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள பெண்கள் இயக்கம் நமக்குத் தேவையில்லை. கிராப்தலை, குட்டைப் பாவாடை நாகரிகமும் நமக்கு வேண்டாம். நமது ஸ்வதேச லட்சியங்களையும், பாரம்பரையையும் அநுசரித்து, தமக்குள்ள தனிவழியில் பெண்கள் இயக்கம் இருக்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். நமது நாட்டில் சில வகுப்புகளில் பெண்களின் நிலைமை மிகவும் மோசமாயிருக்கிறது. அவ்வளவு மோசமாய் அவர்களை வைத்திருப்பதற்கு நமது சரித்திரத்திலோ, சாஸ்திரத்திலோ ஆதாரம் இல்லை.

### பொருளாதாரப் பிரச்னை

நமது பொருளாதாரப் புனருத்தாரணத்தில் அவசரப்பட்டு எதையும் சொல்ல நான் விரும்பவில்லை. ஜனநாயகம், பொதுவுடைமைபோன்ற தத்துவங்கள் மேல்நாட்டு உற்பத்தியல்ல என்பதை முன்பே சொல்லியிருக்கிறேன். எனவே பொதுவுடைமையை அடிப்படையாகக்கொண்டு பொருளாதார அமைப்பை நாம் ஏற்படுத்தினால், அது இந்தியாவிற்குப் புதிதாயிருக்காது; ஆனால் அந்த வழியில் நாம் இறங்குமுன்பு, நம்முடைய முற்கால நிலைமையை மீண்டும் உணர்ந்து நமது சரித்திர ஞான ஒளியைத் தூண்டிவிட்டு அந்த வெளிச்சத்தைக்கொண்டு நமது எதிர்காலத்தைக் கவனிக்கவேண்டும். மேல்நாடுகளிலே செய்யப்படும் சோதனைகளின் முடிவு என்ன என்பது தெரியும் வரையில் நாம் பொறுத்திருக்கவேண்டும்.

மேல்நாட்டுப் பொதுவுடைமைத் திட்டங்களை நமது புராதன நாட்டில் நாம் ஏற்பதற்கு முன்பு, கார்ல் மார்க்ஸின் உற்சாகம் மிகுந்த சீடர்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகமூட்டவேண்டும். அதாவது, கார்ல் மார்க்ஸும் இதர ஜெர்மன் அபேதவாதிகளும் போதித்த பொதுவுடைமைக்கும், ருஷியாவில் ஏற்பட்டிருக்கும் பொதுவுடைமைக்கும் வித்தியாசம் உண்டு. பெரிய அறிஞரான கார்ல் மார்க்ஸை ருஷியா பின்பற்றுவதாயிருந்தால், அது இன்றுள்ள நிலைமையில் இருக்கமுடியாது. அவர் கொள்கைப்படி அபேதவாதம் வருமுன்பு முதலாளித்துவமும், இயந்திரசாலைகளும் பெருகவேண்டும். ஆகவே கண் மூடித்தனமாகக் காப்பியடிப்பது கூடாது. இந்தியாவில் நிலப் பிரச்னையே முக்கியமானது. ருஷியாவில் நிலங்களை யெல்லாம் அரைத்தனத்தார் எடுத்துக்கொண்டதாகச் சொல்லுகிறார்கள். பெயரளவில் துரைத்தனத்தாருடைய சொத்தாயிருக்கிறதே யொழிய, உண்மையில் தனிப்பட்டவர்களுக்கு நிலம் இருக்கிறது. ஆகவே எத்தகைய பொருளாதாரத் திட்டம் வேண்டுமென்பதை இந்தியா முடிவு செய்வதற்கு முன்பு, இன்னும் கொஞ்சம் அநுபவம் அதிகமாக வேண்டுமென்பதே என் அபிப்பிராயம்.

இந்தியா ஒரு பெரிய நாடு. மாறுபாடுகள் அதிகம் உள்ள தேசம். இந்தியாவில் ஏற்படும் ஒற்றுமையின் மூலம் உலகத்திலுள்ள குறைகள் பல தீருவதற்கு வழிபிறக்கும். இந்தியா ஒரு பெரிய நதி; அந்த நதியில் கலாசாரம் என்ற பல சிறுநதிகள் வந்து கலந்திருக்கின்றன; காலம் என்ற பாதையில் அந்த நதி போய்க்கொண்டிருக்கிறது. இந்தியாவில் ராஜீய ஒற்றுமை ஏற்படவேண்டுமானால், கலாசார ஒற்றுமை

வேண்டும். இதற்கு உலகாயத விஷயங்களைப் போதிப்பது ஒன்றுதான் வழி. இதனால்தான் மத வெறியைத் தொலைக்க முடியும். மதவெறி ஒன்றுதான் கலாசார ஒற்றுமையைத் தடுத்து நிற்கிறது. உலகாயத விஞ்ஞான அறிவால், பொருளாதார விழிப்பு ஏற்படும்; அந்த விழிப்பு மிகவும் அவசியம். மத வெறிக்கு அதுதான் சீட்டுக் கொடுக்கும் வல்லமையுள்ளது. ஒரு முஸ்லிம் வியவசாயிக்கும் முஸ்லிம் ஜமீன்தாருக்கும் இருக்கக் கூடிய பொதுவான லாப நஷ்டத்தைவிட, ஹிந்து வியவசாயிக்கும், முஸ்லிம் வியவசாயிக்குமுள்ள பொதுவான லாப நஷ்ட பந்துத்துவம் அதிகமாயிருக்கிறது. ஜனங்களுக்குப் பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றி நன்கு தெரியும்படி செய்துவிட்டால் வகுப்புவாதச் சண்டைகளில் அவர்களைச் சுயநலக்காரர்கள் தூண்டிவிட முடியாமல் செய்யலாம்.

## போலிக் காரணங்கள்

நமது காருண்ய பிரிட்டிஷார், நமக்குத் தாங்களே தர்ம கர்த்தாக்களாய் இருந்துகொண்டு, நாம் சுயராஜ்யத்திற்குத் தகுதியற்றவர்களென்று இடைவிடாமல சொல்லிக்கொண்டே வருகிறார்கள். நாம் விடுதலையடைய நினைக்கு முன்பு கல்வியை அதிகமாய்ப் பரப்பவேண்டு மென்று சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர், அரசியல் சீர்திருத்தத்திற்கு முன்பாகச் சமூக சீர்திருத்தம் வேண்டுமென்கிறார்கள். இன்னும் சிலர், தொழிலபிவிருத்தியில்லாமல் சுயராஜ்யத்திற்குத் தக்கவர்கள் ஆக முடியாதென்கிறார்கள். இவற்றில் ஒன்றாவது உண்மையல்ல. உண்மை யென்னவென்றால், சுயராஜ்யம் கிடைக்குமுன்பு,நமது கதியை நாமே நிர்ணயிக்க அதிகாரம் பெறுமுன்பு,கட்டாயக் கல்வியோ,சமூகசீர்திருத்தமோ,

தொழிலபிவிருத்தியோ ஏற்பட முடியாது. கோகலே வெகு காலத்திற்கு முன்பேகேட்டமாதிரி, கல்விவேண்டுமென்று நீங்கள் கேட்டால், பணமில்லையென்று சர்க்கார் கைவிரிக்கிறார்கள். சமூகசீர்திருத்தத்திற்காகச் சட்டங்கள் செய்ய நீங்கள் விரும்பினால், மிஸ் மேயோவின் சகோதரர்களான இங்குள்ள வெள்ளையர் அவற்றை எதிர்க்கிறார்கள். பொருளாதாரத்திலும் கைத்தொழிலிலும் அபிவிருத்தி வேண்டுமென்று நீங்கள் பாடுபட்டால் இம்பீரியல் பாங்கோ, ரயில்வேயோ, சர்க்காரின் சப்ளை இலாகாவோ உங்களுக்கு உதவிசெய்வதாயில்லை. மதுவிலக்கு வேண்டுமென்று நீங்கள் கேட்டால், பிரிட்டிஷ் சர்க்கார் அதை எதிர்க்கிறார்கள். பஞ்சத்தால் ஒரு பக்கம் மக்கள் வாடுகிறார்கள். மற்றொரு பக்கத்திலிருந்து உணவுப் பொருள்கள் வெளிநாடுகளுக்குப் போகின்றன. அதைத் தடுக்க உங்களால் முடியாது. ஆகவே சுய்ராஜ்யம் ஒன்றே இந்தக் குறைகளை யெல்லாம் தீர்க்கவல்லது. அதைப் பெறுமுன்பு நாம் எதையும் செய்யமுடியாது.

## எதிர்ப்பின் சக்தி

சுயராஜ்யம் பெற நமக்குத் தகுதியிருக்கிறதா? நமது விருப்பந்தான் அதற்குரிய தகுதியாகும். இந்த விருப்பம் ஒன்றைத் தவிர வேறு எவ்வகையிலும் சுயராஜ்யத் தகுதிக்கு நாம் குறைந்தவர்களல்ல. துருக்கி, பாரசீகம், ஆப்கானிஸ்தான், ருஷியாபோன்ற நாடுகளுடன் இந்தியாவை ஒப்பிடுங்கள். அவைகளுக்கெல்லாம் நாம் மேலாகவேயிருக்கிறோம். ஆனால் இந்த விருப்பம் ஒன்றுதான் நமக்குக் குறைவாயிருக்கிறது. எந்த வினாடியில் இந்த விருப்பம் நமக்கு ஏற்படுகிறதோ, அந்த வினாடியே அடிமைத் தளைகள் அகன்றுவிடும். இந்தியரின்

ஒத்துழைப்பாலேயே பிரிட்டிஷ் ஆட்சி இந்நாட்டில் இருக்கிறது. நீங்கள் பிரிட்டிஷ் சாமான்களை வாங்குவதால் பிரிட்டிஷார் பிழைத்து வருகிறார்கள். ஒத்துழைப்பை நீங்கள் நிறுத்திக்கொண்டு, பிரிட்டிஷ் சரக்கு வாங்குவதையும் விட்டுவிட்டால், அதிகாரவர்க்கம் முழுவதும் உடனே விழுந்து சிதறிப் போகும். ஜனங்களின் விருப்பம் பலமாய் ஏற்படும் காலத்தில் தான் ஒத்துழையாமையும் பகிஷ்காரமும் பூர்ணமாய் வர முடியும்.

1922-ஆம் வருஷ கயா காங்கிரசில், நிர்மாண வேலையைத் தவிர வேறு எதுவும் வேண்டியதில்லை யென்று பெரும்பான்மையான பிரதிநிதிகள் அபிப்பிராயப்பட்டார்கள். அதிகார வர்க்கத்திற்கு எப்பொழுதும் எதிர்ப்புக் கொடுத்துக்கொண்டேயிருக்கவேண்டுமென்பது தேசபந்துவின் கருத்து. எதிர்ப்புக்கொடுத்தாலொழிய, நிர்மாண வேலைகளிலோ மற்றத் துறைகளிலோ நாம் வெற்றி பெறமுடியாது. இந்த அடிப்படையான உண்மையை நாம் பெரும்பாலும் மறந்துவிடுகிறோம். "ஒத்துழையாமை பயனில்லை; எதிர்ப்புத் தோற்றுவிட்டது" என்பனபோன்ற வார்த்தைகளைக் கேட்டு ஜனங்கள் ஏமாற்றமடைந்தார்கள். நமது ஜனங்களிடம் ஒரு பரிதாபமான குணமிருக்கிறது. அதாவது எதிர்காலத்தை நாம் யோசிப்பதில்லை. தோல்விகளைக் கண்டு மனம் இடிந்து போகிறோம். பிரிட்டிஷாரின் விடாப்பிடி நமக்குக் கிடையாது. ஆகவே ஒரு போராட்டம் தோல்வி யடையுமென்று தெரிந்தால் நாம் போராடுவதில்லை. தோற்போம் என்று தெரிந்தும், போராட்டத்தை நடத்தும் குணம் நமக்கு வேண்டும். பிரஞ்சுத் துருப்புகள் இந்தக் கொள்கையைக் கைக்கொண்டதால்தான்

சென்ற யுத்தத்தில் பிரான்ஸ் ஜயித்தது. ஆகவே, பிரிட்டிஷ் சர்க்காருக்கு எதிர்ப்பு எந்த வகையிலாவது இருந்துகொண்டே யிருக்கவேண்டும். அந்த எதிர்ப்புப் பயனற்றது என்று யாராலும் சொல்ல முடியாது. தேசிய இயக்கத்திற்கு அது தான் அடிப்படையானது.

---

## அத்தியாயம்—9

## பூர்ண சுயராஜ்யம்

பூர்ண சுயராஜ்யமா, குடியேற்ற ஆட்சியா என்ற வாதம் 1928-ல் இந்தியாவில் பலமாய் அடிபட்டது. சர்வகட்சி மகாநாடு தயாரித்த (நேரு அறிக்கை) திட்டத்தில் குடியேற்ற ஆட்சியே குறிப்பிடப்பட்டிருந்தது. அவ்வருஷத்தில் காங்கிரஸ் மகாசபைக்குச் சுபாஷும், ஜவாஹருந்தான் காரியதரிசிகள் என்பது குறிப்பிடத்தக்கது. சென்னைக் காங்கிரசில் பூர்ண சுயராஜ்யத் தீர்மானம் நிறைவேறி யிருக்கிறபடியால், மீண்டும் பின்னுக்குச் சென்று குடியேற்ற ஆட்சி லட்சியத்தை ஒப்புக்கொள்ள முடியாதென்று சுபாஷும் ஜவாஹரும் சொல்லி விட்டார்கள். பூர்ண சுயராஜ்ய லட்சியத்தை விரும்புகிறவர் அதை வைத்துக்கொள்ளலாம் என்ற ஷரத்துடன் குடியேற்ற ஆட்சி லட்சியத்தைச் சர்வகட்சி மகாநாடு ஒப்புக்கொண்டது. தமக்குக் குடியேற்ற ஆட்சியில் நம்பிக்கையில்லை யென்றும், இருந்தாலும் பூர்ண சுயராஜ்யத்திற்கு முதல்படியாக அதை ஒப்புக்கொள்ளுவதாகவும் சுபாஷ் கூறினர்.

சர்வகட்சி மகாநாடு குடியேற்ற ஆட்சியை ஒப்புக் கொள்ளுவதால், அப்படியே விட்டுவிடக் கூடாதென்று சுபாஷும் ஜவாஹரும் நினைத்தனர். உடனே பூர்ண சுயராஜ்ய சங்கம் என்று ஒரு சங்கத்தை ஸ்தாபித்தார்கள். இந்தச் சங்கத்திற்கு இவர்கள் இருவருமே காரியதரிசிகள். நவம்பர் மாதம் 3-ஆந் தேதி டெல்லியில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, பூர்ண சுயராஜ்யத்தை மீண்டும் வற்புறுத்தியது.

டிசம்பர் மாதத்தில் கல்கத்தாவில், மோதிலால் நேருவின் தலைமையில் காங்கிரஸ் மகாசபை கூடியது. இந்த மகா சபைக்குச் சுபாஷ் போஸ்தான் தொண்டர்படைத் தலைவர். கல்கத்தா காங்கிரசில்தான் குடியேற்ற ஆட்சியைப்பற்றிப் பலமான வாதம் ஏற்பட்டது. சுபாஷும், ஜவாஹரும் பூர்ண சுயராஜ்யக் கட்சியைச் சார்ந்தவர்கள். மோதிலால் நேரு, சர்வகட்சி மகாநாடு ஒப்புக்கொண்ட குடியேற்ற ஆட்சிக் கட்சியைச் சேர்ந்தவர். காங்கிரசில் பிளவு ஏற்பட்டு விடுமோ என்று கூடத் தோன்றியது. அரசியலிலிருந்து விலகியிருந்த மகாத்மா, அவ்வருஷம் மோதிலால் நேருவுக்காகக் காங்கிரசுக்கு விஜயஞ் செய்தார். குடியேற்ற ஆட்சித் தீர்மானத்தை அவர் பிரேரித்தார். பலத்த ஆட்சேபம் செய்தனர் ஜவாஹரும், சுபாஷும். '1929-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 31-ஆந் தேதிக்குள் குடியேற்ற ஆட்சி பிரிட்டிஷார் கொடுப்பார்களானால், காங்கிரஸ் ஒப்புக்கொள்ளும்; இல்லாவிடின் காங்கிரசின் லட்சியம் பூர்ண சுயராஜ்யம்' என்பதே மகாத்மாவின் தீர்மானம்.

சென்னைக் காங்கிரசில் பூர்ண சுயராஜ்ய தீர்மானம் நிறைவேறியிருக்கும்போது, இப்பொழுது இத்தீர்மானத்தை ஒப்

புக்கொண்டால், காங்கிரஸ் பின்னால் போவது போலிருக்கும் என்பதும், அதனால் காங்கிரசின் மதிப்புக் குறைந்து விடுமென்பதும் சுபாஷின் கட்சி. பெரிய தலைவர்கள் வாலி பர்களை ஏமாற்றுவதற்காகவே 1929-ஆம் வருஷக் கடைசி என்ற வாய்தாவைச்சேர்த்திருக்கிறார்கள் என்பதும் சுபாஷின் அபிப்பிராயம். மகாத்மா அந்தத் தீர்மானத்தைப் பிரேரித்த தால், அவர் மீண்டும் தலைமை வகித்துச் சட்டமறுப்பை ஆரம் பிப்பார் என்று யாரும் ஏமாறவேண்டாமென்று சுபாஷ் எச்சரித்தார். ஏனெனில் மகாத்மா அப்படிச் செய்வதாக அவரிடம் நேரடியாகக் கூறவில்லையாம். 'சட்ட மறுப்பு ஆரம் பித்தாலொழியப் பிரிட்டிஷார் வழிக்கு வரப்போவதில்லை; அதில்லாமல் குடியேற்ற ஆட்சி கேட்டால் கொடுத்துவிடப் போகிறார்களா? ஏன் அப்படிக் கேட்டு அவமானப்படவேண் டும்?' என்பது சுபாஷின் கட்சி.

சர்வகட்சி மகாநாட்டின் தீர்மானத்திற்கு மரியாதை கொடுக்கவேண்டுமென்பது மகாத்மாவின் நினைப்பு. சென்னைக் காங்கிரஸ் தீர்மானத்தையும் அலட்சியஞ்செய்ய அவர் விரும்ப வில்லை. அதனால் ஒரு வருஷ வாய்தாவைக் கொடுத்தார். மகாத்மாவின் தீர்மானமே நிறைவேறியது. வயதான தலை வர்கள் ஏமாற்றிவிட்டதாகச் சுபாஷ் நினைத்தார். பூர்ண சுயராஜ்யப் பிரசாரத்தைத் தீவிரமாய்ச் செய்துவந்தார். 1929 ஆகஸ்ட் 11-ஆம் தேதி யன்று வங்காள ராஜீயக் கைதிகள் தினம் கொண்டாடப்பட்டது. கல்கத்தாவில் அதற் காக நடந்த ஊர்வலத்தைச் சுபாஷ் நடத்திச் சென்றார். 'புரட்சி வாழ்க', 'ஏகாதிபத்தியம் வீழ்க' என்ற கோஷங்கள் ஊர்வலத்தில் செய்யப்பட்டபடியால், போலீஸார் கொடிகளைப்

பிடுங்கித் தடியடிப் பிரயோகம் செய்தனர். செப்டம்பர் 3-ஆந் தேதி யன்று சுபாஷையும் வேறு சிலரையும் அந்த ராஜீயக் கைதிகள் தினத்தில், ராஜத்துவேஷம் உண்டாகும்படி பேசிய தாகக் கைதுசெய்தார்கள். அந்த வழக்கில், 1930 ஜனவரி 23-ஆந் தேதி யன்று சுபாஷுக்கு ஒரு வருஷம் தண்டனை கொடுத்தார்கள்.

லாகூர் காங்கிரஸ் 1929 டிசம்பரில் நடந்தது. அங்கே மகாத்மா, கல்கத்தாவில் கொடுத்த வாக்குறுதிப்படிப் பூர்ண சுயேச்சைத்தீர்மானத்தைக் கொண்டுவந்தார். சுபாஷ் அதற்கு ஒரு திருத்தம் பிரேரித்தார். போட்டிச் சர்க்கார் ஏற்படுத்திச் சர்க்காரைத் திணறவைக்க வேண்டுமென்று அவர் சொன்னார். "சுபாஷ் சொல்லும் யோசனை தீவிரமானதுதான். ஆனால் தற்கால நிலைமையில் அது காரியத்தில் நடக்கக் கூடியதா?" என்று மகாத்மா கேட்டார். மகாத்மாவின் தீர்மானத்தில், சட்ட மறுப்பை ஆரம்பிக்கும் வேலையைக் காரியக்கமிட்டிக்கு விட்டிருந்தார். அதெல்லாம் வெறும் கண் துடைப்புச் சமாச்சாரமென்பது சுபாஷின் அபிப்பிராயம்.

சுபாஷின் திருத்தம் தோல்வியுற்றது. அவர் விரும்பியபடி பூர்ண சுயராஜ்யத் தீர்மானம் நிறைவேறிய பின்புங்கூட அவருக்குச் சமாதானம் ஏற்படவில்லை. பூர்ண சுயராஜ்ய சங்கத்தின் வேலையைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தார். அதிகாரத்திலிருக்கும் காங்கிரஸ் தலைவர்கள் வரவர உறுதி குறைந்து மிதமாய்ப் போவதாக அபிப்பிராயப்பட்டார். அந்த வருஷம் காரியக் கமிட்டியில் சுபாஷ் போஸைச் சேர்க்கவில்லை. ஏன் என்று கேட்டபோது 'குணப்பொருத்தமில்லை' என்று மகாத்மா

சொன்னர். அஹிம்ஸையிலோ மகாத்மாவின் மற்ற வழிகளி லோ அவருக்கு நம்பிக்கையில்லை யென்பது வரவர அதிக மாய்த் தெரிந்தது. 1930-ஆம் வருஷத்தில் சட்டமறுப்பு ஆரம்பமாகுமென்றே அவர் நினைத்திருக்கமாட்டார். உலகத் தையே கவர்ச்சிபெறச் செய்த டண்டி யாத்திரையையும், உப்புச் சட்ட மறுப்பையும், அவற்றால் தேசமெங்கும் ஏற்பட் டிருந்த தேசிய உணர்ச்சியையும் அவர் வெளியிலிருந்து பார்க்க முடியவில்லை. ஏனெனில், ஜனவரி மாதம் 23-ஆந் தேதி யன்றே அவருக்கு ஒரு வருஷ தண்டனை விதிக்கப்பட்டது.

---

## அத்தியாயம்—10

## காந்தி - இர்வின் உடன்படிக்கை

1930-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் சுபாஷ் போஸ் விடு தலையானர். ஜெயிலிலிருந்த சமயத்தில் ஜெயில் அதி காரிகளுக்கும் ராஜீயக் கைதிகளுக்கும் தகராறு ஏற்பட்டது; அதன் பயனாகச் சுபாஷ் போஸை அடித்து மாடிப்படியில் உருட்டிவிட்டார்கள். சுபாஷ் மூர்ச்சையிழந்து, வைத்திய உதவியும் சீக்கிரம் கிடைக்காமல் கஷ்டப்பட்டுப் போனர். தலைவர் என்ற நிலைமைக்கு வந்தவுடன், ஓர் அந்தஸ்து ஏற் படுவதும், அதன் பலனாகச் சில விஷயங்களில் கோழைத் தனம் ஏற்படுவதும் சிலருக்கு வழக்கம். அந்தஸ்தின் பலனாக வரும் அந்தக் கோழைத்தனத்திற்கும் சுபாஷுக்கும் வெகு தூரம். எதிரி என்றால் பரம எதிரிதான். அதில் தாட்சண் யமே இல்லை. விருப்பிலும், வெறுப்பிலும் எல்லையைத்தொடும் வரையில் போகும் குணமுள்ளவராகையால், அவர் அடிதடி

வந்துவிடுமே என்று பயப்படக்கூடியவரல்ல. இதனுலதான் 1931 ஜனவரி 26உ நடந்த பூர்ண சுயராஜ்ய தினத்திலும் அவர் அடிபட நேர்ந்தது. மால்டாவிற்குள் வரக்கூடாதென்று அவருக்குத் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஜனவரி 18-ஆந் தேதி அதை மீறினுர். அதற்காக ஒரு வாரம் ஜெயிலி லிருந்து விட்டுக் கல்கத்தாவிற்கு வந்தார். அச்சமயம் அவர் கல்கத்தா மேயர்.

ஜனவரி 26-ஆந் தேதி யன்று கல்கத்தாவில் பல ஊர்வலங்களுக்கு ஏற்பாடாயிருந்தது. ஒன்று மேயர் ஊர் வலம். அந்த ஊர்வலத்திற்காகக் கார்ப்பொரேஷனிலிருந்து மேயர் புறப்பட்டார். கார்ப்பொரேஷன் அதிகாரிகள், சிப்பந்தி கள் எல்லோரும் கூடி மேயருக்கு மாலை சூட்டி, வெற்றிச்சங்கு ஊதிப் பெரிய ஆடம்பரமாய் வழியனுப்பினுர்கள். ஊர்வலம் போய்க் கொண்டிருக்கும்போது போலீசார் மறித்துத் தடை செய்தனர். அதனுல் சுபாஷுக்குக் காயம். சுபாஷைக் கைது செய்து, 147-ஆவது பிரிவுப்படி குற்றஞ்சாட்டி 27-ஆந் தேதி யன்று 6 மாதம் தண்டனை விதித்தார்கள். மார்ச்சு மாதத்தில் காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டபடியால், அச்சமயம் அவர் விடுதலையானுர்.

அச்சமயம் அவர் வெளிவந்த பின்புதான், காங்கிரஸை நடத்தும் தலைவர்களுக்கும், அவருக்குமுள்ள அபிப்பிராய பேதம் எவ்வளவு அதிகமாயிருக்கிற தென்பது தெரியலா யிற்று. காந்தி-இர்வின் உடன்படிக்கையைப்பற்றிக் காங்கிரஸ் தலைவர்களுக்குள் அபிப்பிராயபேதம் இருப்பது இயற்கை. எந்த விஷயத்திலும் இருக்கத்தான் செய்யும். ஆனுல் சொந்த அபிப்பிராயங்கள் அப்படியிருந்தாலும், தேசத்தின் நிலைமை

யையும், ராஜதந்திரத்தையும் உத்தேசித்து, சில காரியங்களைச் சில சந்தர்ப்பங்களில் செய்யவேண்டியதாயிருக்கலாம். பெரும்பாலோர் ஒருவிதமாய் அபிப்பிராயப்பட்டால், கட்சிக் கட்டுப்பாட்டை உத்தேசித்து அபிப்பிராய பேதமுள்ளவர்கள் மெஜாரிடித் தீர்ப்புக்கு அடங்கித்தான் நடக்கவேண்டும். இந்த மாதிரிதான் ஜவாஹர்லால் நடந்தார்.

ஆனால், சுபாஷ் இப்படி நடக்கவில்லை. காந்தி-இர்வின் ஒப்பந்தத்தைப் பகிரங்கமாய் எதிர்த்தார். அச்சமயத்தில் மற்றொரு முக்கியமான சம்பவம் நடைபெற்றது. சுகமும் துக்கமும் கலந்து வரும் என்பதைப்போல, பிரிட்டிஷ் சர்க்கார் இறங்கி வந்து காங்கிரசிடம் சமரஸம் செய்துகொண்ட ஒரு மகத்தான சந்தோஷத்தைக் கொண்டாடும்போது ஒரு துக்ககரமான காரியமும் நடந்தது.

1931, மார்ச்சு, 4-ஆந்தேதி காந்தி - இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டது. பகத்சிங்கை விடுவிக்க மகாத்மா எவ்வளவோ முயற்சிசெய்தும் பலிக்கவில்லை. 23-ஆந் தேதி இரவே பகத்சிங், சுகதேவர், ராஜகுரு ஆகிய மூவரையும் தூக்கில் போட்டு, அன்றிரவே அவர்கள் பிரேதத்தைச் சாம்பலாக்கிச் சர்க்காரே ஆற்றில் கரைத்துவிட்டார்கள். இந்தச் சம்பவம் இந்தியா முழுவதையும் துக்கத்தில் ஆழ்த்தியது. இச்சமயத்தில், காந்தி-இர்வின் ஒப்பந்தத்தைக் கண்டித்தவர்களுக்கு ஆதரவு அதிகமாயிற்று. இளைஞர்கள் பலர் மகாத்மாவைத் தூஷித்தனர். சர்க்கார் இஷ்டப்பட்டிருந்தால், கராச்சி காங்கிரஸ் முடிந்தபின்பு பகத்சிங்கைத் தூக்கில் போட்டிருக்கலாம். 25-ஆந்தேதி மகாத்மா கராச்சி வருவதாயிருந்தது. 29-ஆந்தேதி கராச்சி காங்கிரஸ் ஆரம்பம். எனவே,



10. சுபாஷ் போஸ், அன்னை கஸ்தூரிபாயிடம் ஆசி பெறல்

23-ஆந்தேதி தூக்கிலிட்டது, மகாத்மாவின் செல்வாக்கைக் குறைப்பதற்குச் சர்க்கார் செய்த சூழ்ச்சியேயென்று சொல்ல வேண்டும்.

கராச்சி காங்கிரசில் பகத்சிங் தீர்மானத்தை ஜவாஹர்லால் பிரேரிக்கும்போது அழுதுவிட்டார். அவ்வளவு அபிமானம் ஜவாஹருக்கு உண்டு. மோதிலால் நேருவுக்கும் அதை விட அதிக அபிமானம் உண்டு. அவரும் பகத்சிங் விடுதலைக்காக முயற்சி செய்யும்படி, தாம் மரணமாகு முன்பு மகாத்மாவிடம் சொன்னார். என்றாலும் நம்முடைய சக்தி என்ன என்பதை ஜவாஹர் அறிந்திருந்தபடியால், பகத்சிங்கைத் தூக்கிலிட்டதற்காக மகாத்மாவைக் குற்றஞ் சொல்லவோ, அல்லது காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை எதிர்க்கவோ முன்வரவில்லை.

25உ யன்று மகாத்மா கராச்சி வந்தார். கோபங் கொண்ட வாலிபர்கள் டலர், மகாத்மாவுக்குக் கறுப்புக் கொடி காட்டி ஆரவாரஞ்செய்து, 'பகத்சிங்கைக் கொலை செய்தவர்' என்று தூஷித்தார்கள். மகாத்மா அஞ்சவில்லை. வெறி கொண்ட வாலிபர்கள் அவரைத் தாக்கி அபாயமுண்டுபண்ணி விடுவார்களோ என்று பயப்படும்படியான நிலைமைகூட ஏற்பட்டது. தாம் செய்யவேண்டிய வேலை இன்னும் இருப்பதாகக் கடவுள் நினைப்பாரானால் தம்மை யாரும் கொல்ல முடியாதென்றும், தம் வேலை பூர்த்தியாய்விட்டதாகக் கடவுள் நினைப்பாரானால் தம்மை யாரும் காப்பாற்ற முடியாதென்றும் அவர் சொன்னார். ஜவாஹர்லால், வாலிபர்களின் கோபத்தை அடக்க முயன்றார்.

இதற்கு மத்தியில், 27-ஆந் தேதி கராச்சியில் கூடிய நவஜவான் மகாநாட்டில் சுபாஷ் தலைமை வகித்து, காந்தி-

இர்வின் உடன்படிக்கையைப் பலமாய்த் தாக்கினர். தீவி
ரவாதிகளின் கொள்கைகளைக் கண்டித்தார். அவருடைய செய்கை
எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்ப்பதுபோலிருந்தது.
என்றாலும் மகாத்மாவின் செல்வாக்குக் குறையவில்லை. 29-
ஆம் தேதி காங்கிரஸ் ஆரம்பமாயிற்று. 30-ஆம் தேதியன்று,
காந்தி-இர்வின் உடன்படிக்கையை ஒப்புக்கொள்ளும் தீர்
மானத்தை நேருஜி பிரேரேபித்தார். இளைஞர்களின் தலை
வர்கள் என்று சொல்லப்பட்ட இரண்டொருவர் தீர்மானத்தை
எதிர்த்தார்கள். வோட்டுக்கு விட்டபோது, 4 ஆயிரம்
பிரதிநிதிகளில், சுமார் பத்துப்பேரைத் தவிர, பாக்கியுள்
ளோர் அனைவரும் தீர்மானத்தை ஆதரித்தார்கள். மகாத்மா
வெற்றி பெற்றார். காங்கிரசில் பிளவு ஏற்பட்டுவிடும்
என்று எதிர்பார்த்த சர்க்கார் ஏமாற்றம் அடைந்தார்கள்.
சுபாஷுக்கும் திருப்தியில்லை.

---

## அத்தியாயம்—11

## மகாத்மாமீது கோபம்

சுபாஷ் போஸ் இயற்கையிலேயே ஒரு புரட்சிக்காரர்.
புரட்சிக்காரர் என்றால், வெடிகுண்டு வீசுகிறவர் என்
பது அர்த்தமல்ல. இருக்கிற நிலைமையை அப்படியே தழுவிக்
கொண்டுபோக வேண்டுமென்று வைதிகக் கொள்கையை
எதிர்க்கும் புரட்சிக்காரர். ஜாதி வித்தியாசத்தை உடனே
தொலைக்க வேண்டுமென்பதில் தீவிரமான நம்பிக்கையுள்ள
வர். எந்த விஷயத்தையும் தாம் யோசிக்காமல் சரியென்று
சொல்லமாட்டார். ஆத்மார்த்திகப் போக்கு அவருக்கு இந்

தாலும், ராஜீயக் கொள்கைகளிலும், வழிகளிலும், மகாத்மா வின் முறைகளில் அவ்வளவு நம்பிக்கை இல்லாதவர். பிற நாட்டுச் சரித்திரங்களை நன்றாய் நுணுக்கமாய்ப் படித்தறிந்த வர். அவைகளில் மகாத்மாவின் முறைகளில் எதையும் காண முடியாது.

சர்வ வல்லமையுள்ள பிரிட்டிஷாரிடம் அஹிம்சையாலும், சத்தியாக்கிரஹத்தாலும் சுயராஜ்யம் பெற்றுவிட முடியுமா என்பதில் அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டது. தவிர மகாத்மாவும், அவரை ஆதரிக்கும் பெரிய தலைவர்களும், போதுமானபடி தீவிரவாதமில்லாதவர்கள் என்றும் அவருக் குச் சந்தேகம் தோன்றியது. சுபாஷின் தேசபக்தி யாருடைய தேசபக்திக்கும் குறைந்ததல்ல. அவருடைய கூர்மையான புத்தியைப்பற்றியும் யாரும் குறைகூறமுடியாது. அடிபடுவது முதல், உயிர்விடுவது வரையில் எந்தத் தியாகத்திற்கும் அவர் தயார். வெறும் லட்சியமான கனவு காண்பவரல்ல. உயர்ந்த லட்சியத்தோடு, கிரியாம்சையில் நடக்கக்கூடியவை எவை என்பதையும் அறிந்தவர். அதனால்தான் பிரிட்டிஷாரின் குணத்தைச் சத்தியாக்கிரஹத்தாலும், அஹிம்சையாலும் மாற்றிவிட முடியுமா என்று சந்தேகப்பட்டார். அயர்லாந்தைப் போல இந்தியாவும் நடந்தாலொழியச் சுயராஜ்யம் வருமா என்பது அவருக்குப் பெரிய சந்தேகமாயிருந்தது. காந்தி-இர்வின் உடன்படிக்கையை லார்ட் வில்லிங்டன் உடைத் தெறிந்ததும், 1933-ஆம் வருஷம், மே, 8-ஆந்தேதி அன்று மகாத்மா சட்டமறுப்பை நிறுத்தியதும், அவருடைய சந்தே கங்களைப் பலப்படுத்திவிட்டன.

1933-ல் சுபாஷின் தேக நிலைமை மோசமாய் விடவே அவர் சிகிச்சை பெறும் பொருட்டு ஐரோப்பாவுக்குச் செல்லச்

சர்க்கார் அநுமதித்தனர். ஐரோப்பா செல்லுமுன்பு அவருடைய பெற்றோர்களை, வீட்டுக்குச் சென்று பார்ப்பதற்குக் கூடச் சர்க்கார் அநுமதிக்கவில்லை. பம்பாயில் கப்பலில் போய் பார்க்கலாமென்று சொன்னார்கள். பெற்றோர்கள் அசௌக்கியமான நிலைமையில் இருந்தபடியால், கப்பலுக்குச் சென்று பார்க்கமுடியவில்லை. சில நண்பர்களும், சில பந்துக்களும் கப்பலுக்குச் சென்று போலீஸ் அதிகாரிகள் முன்பு பார்த்துப் பேசினார்கள். பிப்ரவரி 23-ஆந்தேதி யன்று பம்பாயிலிருந்து கப்பலில் ஐரோப்பா சென்றார். ஐரோப்பாவில் அவரும், அவரைப்போலச் சிகிச்சைக்காக ஜெயிலிலிருந்து சென்ற வித்தல்பாய் பட்டேலும் ஒன்றாயிருந்து ராஜீய விஷயங்களைப்பற்றி விவாதித்து வந்தனர். மகாத்மா இயக்கத்தைப்பற்றி, சுபாஷைப்போலவே பட்டேலும் அபிப்பிராயமுள்ளவர்.

மே மாதத்தில் சட்ட மறுப்பை நிறுத்திவிட்டதாக அவ்விருவரும் கேள்விப்பட்டதும் மிகுந்த ஆத்திரமடைந்தனர். மகாத்மா காந்தி தலைமை வகிக்கத் தகுதியற்றவரென்று அவர்கள் சொன்னார்கள். அதைப்பற்றி இரண்டு பேரும், மே 9-ஆந்தேதி வெளியிட்ட அறிக்கையில் பின்வருமாறு குறித்திருக்கிறார்கள் :—

"மகாத்மா, ஒரு ராஜீயத் தலைவராயிருக்கும் தகுதியிலிருந்து தவறிவிட்டார் என்பதே எங்களது தெளிவான அபிப்பிராயம். காங்கிரஸைப் புதுக்கொள்கையில் சீர்திருத்தி அமைத்து, புதிய ராஜீய முறைகளை அநுஷ்டிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. அதற்கு ஒரு புதிய தலைவர் வேண்டியது மிகவும் அவசியம். ஏனெனில் தம்

ஆயுள் முழுவதும் நம்பிய கொள்கைகளை விட்டுவிடும்படி மகாத்மாவைக் கேட்பது நியாயமல்ல. இந்த முறைப்படி காங்கிரஸ் முழுவதையும் மாற்ற முடியுமானல், அதுவே சிறந்த வழி. மாற்றமுடியாமல் போனல், தீவிரக் கொள்கைகளைக் கொண்ட ஒரு புதுக்கட்சியைக் காங்கிரசுக்குள்ளேயே ஆரம்பிக்கவேண்டும்.''

அதே வருஷம் ஜூன் மாதம் 10-ஆம் தேதியன்று லண்டனில் இந்திய ராஜீய மகாநாடு ஒன்று நடந்தது. அதற்குச் சுபாஷைத் தலைவராய்த் தேர்ந்தெடுத்தார்கள். இந்தியாவை விட்டுச் சுபாஷ் புறப்படும்போதே, பிரிட்டனைத் தவிர மற்ற ஐரோப்பிய நாடுகளுக்குமட்டும் போகத்தான் அநுமதி கொடுத்தார்கள். மகாநாட்டிற்காக லண்டனுக்குப் போக மீண்டும் அநுமதி கேட்டபோதும் பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்துவிட்டார்கள். தம்முடைய அக்கிராசனப் பிரசங்கத்தை எழுதி, மகாநாட்டிற்குச் சுபாஷ் அனுப்பினர். அதில் அவர் கூறியதும் அவருடைய மனப்போக்கைத் தெளிவாய் எடுத்துக் காட்டுகிறது. அவர் கூறியதாவது:—

"போதுமான ஆக்ரஹமோ, ராஜ தந்திரமோ நமது போராட்டத்தில் இல்லை. காந்தி-இர்வின் உடன்படிக்கை ஒரு பெரிய தவறு. சென்ற மே மாதத்தில் சட்ட மறுப்பை நிறுத்தியது நமது தேசத்திற்கு ஒரு பெரிய விபத்து. ஒரு நெருக்கடியான சமயத்தில் சட்ட மறுப்பை நிறுத்தியதால், சென்ற 13 வருஷங்களாகச் செய்த வேலை, அனுபவித்த கஷ்டம், தியாகம் எல்லாம் வீணாயின. * இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் சமாஸம் என்பதே இருக்கமுடியாது. ஏனெனில் இரு

நாடுகளுக்கும் பொதுவான நன்மை கிடையாது. இடை யிடையே சமரஸம் செய்வதென்ற நினைப்பையே விட்டு விடவேண்டும். நல்ல அஸ்திவாரத்தின்மீது, புத்திக்கும் யுக்திக்கும் பொருத்தமான முறைகளைக்கொண்டு பெரிய முறையில் போராட்டம் ஆரம்பிப்பதற்கு இந்தியர் தயா ராகவேண்டும்."

மகாத்மா சட்ட மறுப்பை 1933-ல் நிறுத்தியது சரியா சரியில்லையா என்பதைப்பற்றி அக்காலத்தில் அபிப்பிராய பேதம் பலமாயிருந்தது. ஆனால் ஒரு செய்கையின் பலனைப் பின்னால் வரும் காரியங்களைக்கொண்டுதான் கவனிக்க முடி யும். ஜவாஹர்லால் உள்பட அறிவாளிகள் எல்லோரும் சட்ட மறுப்பை நிறுத்தியது சரியல்ல என்றுதான் நினைத்தார்கள். இதுவரை நடந்திருக்கும் காரியங்களைக் கவ னிக்கும்போது, மகாத்மா அச்சமயத்தில் சட்ட மறுப்பை நிறுத்தியது மிகவும் சரியென்று ஏற்பட்டுவிட்டது. புத்திக்கும் யுக்திக்கும் பொருத்தமான காரியங்களைச் செய்ய முயல்வது அறிவாளிகளின் வழி. புத்திக்கும், யுக்திக்கும் தட்டுப்படாத காரியங்களும் உண்டு. இன்ன இடத்தில் கிணறு வெட்டி னால் நல்ல தண்ணீர் கிடைக்குமென்று ஒருவர் சொல்லுகிறார். அது புத்திக்கோ, யுக்திக்கோ தட்டுப்பட்டதாயில்லை. என் றாலும் அங்கே வெட்டினால் அவர் கூறியதைப்போல நல்ல தண்ணீர் கிடைக்கிறது. இதை அருள் என்றுதான் சொல்லவேண்டும். எல்லோருக்கும் இந்த அருள் கிடைப்ப தில்லை. எவ்வளவு படித்தாலும் இது வருவதில்லை. சில ருக்குத்தான் இது இயற்கையாய்க் கிடைக்கிறது. இந்திய ரின் மனப்போக்கையும், இந்தியாவின் நிலைமையையும் அறிவதில் மகாத்மாவுக்கு ஓர் அதிசயமான சக்தியிருக்கிறது.

அந்தச் சக்தியைக் கொண்டு அவர் செய்யும் காரியங்கள் புத்திக்கும், யுக்திக்கும் உட்பட்டனவல்லவென்று பலருக்குத் தெரிவதில்லை. ஆனால் காலப்போக்கில், முன்னால் அவர் செய்ததுதான் சரியென்று நிரூபணமாய் விடுகிறது.

---

## அத்தியாயம்—12

## பாஸிஸமா? பொதுவுடைமையா?

சுபாஷ் தம் தந்தையார் மிகவும் அபாயமான நிலைமையில் இருந்ததாகத் தெரிந்தபடியால், 1934-ஆம் வருஷக் கடைசியில் இந்தியா திரும்பினர். அவர் கல்கத்தா வந்ததும், தம் வீட்டிலுள்ளவர்களைத் தவிர வேறு யாரிடமும் பேசக் கூடாது, எங்கும் போகக்கூடாது என்ற தடையுத்தரவு அவருக்குப் பிறப்பிக்கப்பட்டது. அவர் வருமுன்பே அவர் தந்தையார் காலமாய்விட்டார். தந்தையின் சிராத்த காரியங்களை முடித்தபின்பு மீண்டும் ஐரோப்பாவுக்குச் செல்லச் சர்க்கார் அநுமதித்தார்கள்.

1935 ஜனவரியில் பம்பாயில் அவர் கப்பலேறினர். அந்த வருஷத்தில் ரோமன் ரோலந்து என்ற பிரஞ்சு அறிஞரைச் சந்தித்தார். அவர் பெரிய அறிவாளி; சமாதானம் உலகில் நிலவவேண்டுமென்பதில் மிகுந்த ஆசையுள்ளவர்; சாந்த சொரூபி; மகாத்மாவின் சத்தியாக்கிரஹத்தைக் கண்டு, இனி மிருகபலம் தொலைந்துவிடும் என்ற ஆனந்தத்தில் ஆழ்ந்திருப்பவர்; நோபெல் பரிசு பெற்றவர்; மகாத்மாவின் சரித்திரத்தை எழுதியவர். "சத்தியாக்கிரஹ இயக்கம் தோற்றுப் போயிற்றே; இப்பொழுது உங்கள் அபிப்பிராயமென்ன?"

என்று அவரிடம் கேட்க வேண்டுமென்பது சுபாஷின் ஆசை; அவரைச் சந்தித்து மகாத்மாவைப்பற்றிப் பேசினார். இந்தியாவிற்கு மகாத்மா செய்திருக்கும் சேவையைச் சுபாஷ் பாராட்டினார். என்றாலும், பிரிட்டிஷாரின் ராஜ தந்திரத்திற்கு எதிரில், உண்மையும், அஹிம்சையும் வெற்றிபெற முடியுமா என்று கேட்டார். சத்தியாக்கிரஹம் தோற்றுப் போயிருந்தால், அதற்காகத் தாம் வருந்துவதாகச் சொன்னாரே யொழிய, மேலே அதைப்பற்றி எதுவும் சோலந்து சொல்லவில்லை. ஆனால் இந்தியரின் விடுதலைக்காகப் புதுக்கட்சி எது ஏற்பட்டாலும் அதைத் தாம் ஆதரிக்கக் கடமைப்பட்டிருப்பதாக அவர்கூறினார். அந்த வருஷத்தில் 'இந்தியாவின் போராட்டம்-1920-1934' என்ற பெயருடன் ஒரு புத்தகம் சுபாஷ் வெளியிட்டார். அப் புத்தகத்தில் காங்கிரசின் போராட்டங்களையும், மகாத்மாவின் சேவைகளையும், அவற்றால் ஏற்பட்ட சாதக பாதகங்களையும் எழுதியிருக்கிறார். அதில் அவர் கூறும் அபிப்பிராயங்களைச் சுருக்கமாகக் கீழே கொடுக்கிறோம்:—

"இந்தியாவில் மிதவாதிகள் ஆரம்பித்த சட்டத்திற்குட்பட்ட கிளர்ச்சி தோல்வியுற்ற பின்பு, வெகுகாலமாக நிராயுதபாணிகளா யிருக்கும் காரணத்தினால் பலாத்கார இயக்கம் தோற்றபின்பு, காந்தி ஒரு புது முறையைக் கொடுத்தார். இன்றிருக்கும் இந்திய தேசிய காங்கிரஸ் அவர் உருவாக்கியது. வெறும் பேசும் சபையாயிருந்த அதை, உயிர் ததும்பிச் சண்டைபோடும் ஸ்தாபனமாகச் செய்தார். அதன் புகழ் கிராமங்களிலும், பட்டணங்களிலும் பரவி, இந்திய சமுதாயம் முழுவதும் அதற்குச் செவி கொடுக்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது;

உயர்ந்த ஒழுக்கமும், தியாக சக்தியும் தலைவர் பதவிக்கு அவசியமாயின.

" அவர் பெரிய சக்தியாய்த் தோன்றிய போதிலும், பெரும்பான்மை இந்தியர் விரும்புகிறபடி அவ்வளவு தூரம் புரட்சிக்காரரல்ல. இந்தியரின் குணங்களை மகாத்மா அறிந்திருப்பதைப் போலப் பிரிட்டிஷாரின் குணங்களை அவர் அறியவில்லை. அதனால் அவருடைய இயக்கம் தோல்வியுற்றது. பழைய புராதனப் பெருமைகளைப் பேசி ஜனங்களை அவர் கவர்ச்சி செய்வதால், அந்தப் புரா தன வழக்கத்தால் இந்தியரிடமுள்ள சில பலவீனங்களுக்கு அவர் ஆதரவு கொடுக்கிறார். அந்தப் பலவீன குணங்களால் தான் இந்தியா வீழ்ச்சியடைந்தது. அதிசயம், தெய்விக சக்தி போன்றவைகளில் நம்பிக்கையுள்ள ஜனங்களின் ராஜீய விடுதலைக்கு ஒரே வழிதான் இருக்கிறது. பகுத் தறிவிலும், வாழ்க்கையின் சம்பத்துக்களைக் காட்டும் நவீனமான போக்கிலும் அவர்களுக்கு ஆசை ஏற்படும்படி செய்வதே அந்த வழி.

" காந்தி-இர்வின் உடன்படிக்கை ஷரத்துக்களைப்பற்றி முதலில் வெளியான வதந்திகளைக் கேட்டதும், மகாத்மா வைக் குருட்டுத்தனமாய்ப் பின்பற்றுபவர்கள்கூட, மகாத்மா இந்த ஷரத்துக்களுக்கு உடன்படுவாரா என்று ஆச்சரியப்பட்டார்கள். அந்த உடன்படிக்கையின் பலன் என்ன ? யாதொரு வாக்குறுதியும் எதிர்க்கட்சியிட மிருந்து வாங்காமல் சட்ட மறுப்பை நிறுத்திவைத்தது வட்டமேஜை மகாநாட்டில் காந்தியைக் கலந்துகொள்ளும் படி செய்தது. வட்டமேஜை மகாநாடு இரண்டு கட்சி

களையும் கட்டுப்படுத்தக்கூடிய தீர்மானங்களைச் செய்யும் உண்மையான மகாநாடல்ல. மற்ற இந்தியப் பிரதிநிதிக ளெல்லாம் பிரிட்டிஷ் சர்க்காரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் கள். காங்கிரசின் பிரதிநிதியாக மகாத்மா ஒருவரே சென்றிருந்தார். நூறு பேர்களுக்கிடையில் அவர் ஒருவர் என்ன செய்யமுடியும்? லார்ட் இர்வின் உயர்ந்த நோக் கத்தோடுதான் உடன்படிக்கை செய்தார். ஆனால் அவர் சீமைக்குப் போனதும், அதிகார வர்க்கத்தின் போக்குக் கடுமையாய்விட்டது. வட்டமேஜை மகாநாட்டில் இந்தி யாவின் கோரிக்கை தோல்வியுற்றது. லண்டனிலுள்ள ராஜீய வாதிகளுக்கு மகாத்மா இணையல்ல. இந்தியாவிற்குத் திரும்பியவுடன் அவர் கைது செய்யப்பட்டார். மீண்டும் போராட்டம் ஆரம்பமாயிற்று. ஆனால் 1930-ல் போராட்டம் ஆரம்பிக்கும்போது இருந்த சாதகமான நிலைமை அச்சமயம் இல்லை. 1930-ல், காங்கிரசின் போர் முறைகள் சர்க்காரைத் திணற வைத்தன. டெல்லி ஒப்பந் தத்தால் ஏற்பட்ட சமரஸகாலம், சர்க்கார் தனது எதிர்ப் புகளைத் தயாராக்கும்படி இடம் கொடுத்துவிட்டது. ஆகவே மறு போராட்டம் ஆரம்பித்தவுடனேயே சர்க்கார் பலமாய் அடித்து அடக்கிவிட்டார்கள். மதத்தையும், ராஜீ யத்தையும் ஒன்று சேர்த்ததன் பலனாகக் காங்கிரஸ் பலம் சிதறுண்டு போயிற்று. இதோடு அந்தப் போராட்டத் தின் அத்தியாயம் முடிந்தது. இனி புதிய முறையில், புதிய இந்தியா போராட்டத்தை ஆரம்பிக்கும்.

"மகாத்மா இந்தியாவிற்கு மகத்தான சேவை செய் திருக்கிறார். இனியும் செய்வார். ஆனால் அவருடைய

தலைமையில் இந்தியா விடுதலை அடையமுடியாது. பாஸிஸம், பொதுவுடைமை இரண்டும் கலந்த ஒரு கொள்கையே இந்தியாவிற்குப் பொருத்தமானது. இந்தப் புதிய கொள்கைக்கு 'ஸாம்யவாதி' (எதிர்கால இந்தியா) என்று பெயர் கொடுக்கவேண்டும்."

சுபாஷ் ஐரோப்பாவில் இருக்கும்போது முஸோலினியைப்பார்த்துப் பேசியிருக்கிறார். டிவேலராவைப் பல தடவை கண்டு வாதித்திருக்கிறார். டிவேலராவும் சுபாஷும் நண்பர்கள் போலப் பழகியிருக்கிறார்கள். அவர் கொள்கையிலும் செய்கையிலும் சுபாஷுக்கு மிகுந்த பிரமையுண்டு. பாஸிஸ்ட் கொள்கைதான் இந்தியாவிற்குப் பொருத்தமானது என்று சுபாஷ் ஒரு காலத்தில் பலமாய் நினைத்துக்கொண்டிருந்தார். அப்புறந்தான் பாஸிஸமும் பொதுவுடைமையும் கலந்த ஒரு கொள்கை வேண்டுமென்ற அபிப்பிராயத்திற்கு வந்தார். தற்சமயம் இவ்விஷயமாய் அவர் கொள்கை என்னவென்பது தெரியவில்லை.

---

## அத்தியாயம் — 13

## ஸாம்யவாதி அல்லது எதிர்கால இந்தியா

"ஸாம்யவாதி" என்ற பெயருடன் ஒரு கட்சி ஆரம்பிக்க வேண்டுமென்று சுபாஷ் விரும்பியதை முன்னால் குறிப்பிட்டிருக்கிறோம். அதைப்பற்றி விரிவாய் எழுதிய ஒரு புத்தகம் பிரசுரமாயிருக்கிறது. அதில் இந்தியாவின் சுதந்திரப் போராட்டமும், வெளிநாடுகளில் நடைபெற்ற போராட்டங்களும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. முடிவாக ஒத்துழையாமையைப் பற்றிய ஆராய்ச்சியை அதில் காணலாம்.

அந்த இயக்கத்திலுள்ள சாதக பாதகங்களையும், மேலே செய்யவேண்டிய வேலைகளையும் பற்றி அதில் கூறப்படுவன வற்றைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறோம் :

"ஒத்துழையாமை இயக்கத்தினால் ஏற்பட்ட நன்மைகளாவன :—

(1) ஏதோ பொழுதுபோக்கிற்காக ராஜீயத்தை வைத்துக்கொண்டிருந்தவர்களைக் காங்கிரசிலிருந்து விரட்டி, முழு நேரமும் காங்கிரசுக்கு வேலை செய்கிறவர்களைச் சிருஷ்டி செய்தது.

(2) தீண்டாமை விலக்கைப் போன்ற சமூக விஷயங்களைக்காங்கிரசில் முதல்தடவையாகக்கொண்டுவந்து சேர்த்தது.

(3) இதற்கு முன்பு படித்தவர்களுக்குள்ளேயே தேசீய இயக்கம் இருந்துவந்தது. அதைவிட்டு நீங்கி, தூரத் தொலையிலுள்ள கிராமங்களுக்குக்கூடக் காங்கிரஸ் போகும்படி செய்து, அதனால் காங்கிரஸ் இயக்கத்திற்குப் பெரிய ஆதரவு தேடியது.

(4) கதர், உப்புக் கிளர்ச்சி மூலம் பொது ஜனங்களின் கவர்ச்சியைப் பெற்றது.

(5) ஜெயில் போவது போன்ற பயங்களை ஒழித்தது.

(6) பலமான ஸ்தாபனம், தேசீயக்கொடி, தேசீய கோஷங்கள், ஒரே மாதிரி அங்கி (கதர்) என்பன போன்றவைகளை ஏற்படுத்தித் தேசீய இயக்கத்தை ஒழுங்குபடுத்தியது.

(7) கோர்ட்டுகளில் எதிர்வாதம் செய்ய மறுத்து, பல இடங்களில் சமரஸக் கமிட்டிகள் ஏற்படுத்தியதன் மூலம் பிரிட்டிஷ் கோர்ட்டுகளின் மதிப்பைக் குறைத்தது.



11. வார்தாவில் மகாத்மாவுடன் இருக்கும் வங்க தேசப் பிரஷ்டரான ஸ்ரீ உபாத்யாயாவுடன் சுபாஷ் சம்பாஷணை

"ஒத்துழையாமை இயக்கத்திலுள்ள குறைகளாவன:—

(1) முன்னால் கைக்கொண்ட முறைகளைவிட ஒத்துழையாமை முறை எவ்வளவோ முன்னேற்றமுள்ள தென்றாலும், போதுமான அளவில் இல்லை. அது ஒரு சீர்திருத்த இயக்கமே யொழியப் புரட்சித் தன்மையுள்ளதல்ல.

(2) தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்று சொல்லியது. ஆனால் ஜாதி வித்தியாசத்தை ஒழிக்கப் பாடுபடவில்லை.

(3) தொழிலாளர், வியவசாயிகள் நிலைமையை விருத்தி செய்ய விரும்பியது. ஆனால் ஜமீன்தார்களுக்கும், ஆலை முதலாளிகளுக்கும் எதிராக அவர்களுடன் சேர்ந்துகொள்ள விரும்பவில்லை.

(4) பூர்ண சுயேச்சையே நமது லட்சியம் என்று சொல்லுவதில் அரைமனதே காட்டியது.

(5) அஹிம்ஸைக்கு அளவுக்கு மீறிப் பிரதானம் கொடுத்தது.

(6) ஆகாரம், பிரார்த்தனை, உபவாசம், வைத்தியம், ஆலைத்தொழில் முதலியவற்றில் மகாத்மாவுக்குள்ள சொந்த அபிப்பிராயத்தைக் கொண்டு, ஒத்துழையாமை இயக்கம் நாகரிகத்திற்கு விரோதமான மூட நம்பிக்கை வாய்ந்தது என்று பலர் நினைக்கும்படி செய்தது.

(7) ஒரு தலைவரிடமே மிகுந்த நம்பிக்கையை வைத்திருந்தபடியால், ஜனநாயக உணர்ச்சியின் வளர்ச்சியைக் குறைத்துவிட்டது.

(8) போல்ஷவிக் தலைவரான லெனின், இடம் பொருள் ஏவலை யோசித்துச் சமயத்திற்குத் தக்கபடி தம் முறைகளை

மாற்றி வந்தார். ஒத்துழையாமை இயக்கத் தலைவர் அப்படிச் செய்யவில்லை. தம் அந்தராத்மாவின் உணர்ச்சியைக்கொண்டே ஒத்துழையாமை இயக்கத்தின் போக்கை மாற்றிவந்தார்.

(9) ஒத்துழையாமையின் போக்கு மத உணர்ச்சிகளுக்குத் திருப்தி செய்வதாயிருந்ததே யொழிய, ராஜீய உணர்ச்சிகளைத் திருப்தி செய்வதாயில்லை.

(10) சமூக, பொருளாதார, ராஜீயப் பிரச்னையில் விட்டுக் கொடுக்கும் போக்குடையதா யிருந்தபடியால், ஏராளமாகப் பின்பற்றுபவர்கள் கிடைத்தார்கள். அதனால் அவர்கள் கட்டுப்பாட்டுக்கோ பெரிய தியாகங்களுக்கோ தயாராக இல்லை.

(11) ஜனங்களுடன் காங்கிரஸ் இயக்கம் சம்பந்தம் ஏற்படுத்தியிருப்பது உண்மையே. ஆனால் பாமர ஜனங்களின் உதவியைக்கொண்டு மட்டும் நடக்கக்கூடிய அளவில் சம்பந்தம் ஏற்படவில்லை.

"இனி நமது எதிர்கால வேலைகளையும், அவற்றில் இருக்கக்கூடிய கஷ்டங்களையும் கவனிப்போம். இவற்றையும், இயக்கத்தைப்பற்றிய சில பொதுவான விதிகளையும் அறிந்துகொண்டால், எதிர்காலத்தை நாம் தீர்மானம் செய்வது சுலபமாயிருக்கும். ஆகவே மற்ற நாடுகளில் நடந்த போராட்ட முறைகளைக் கவனிப்போம்.

"அயர்லாந்தில், பிரிட்டிஷ் ராணுவமாகிய அன்னிய ராணுவத்துடன் போராடவேண்டி யிருந்தது. தேசீயத் தொண்டர்கள் இந்த வேலையைச் செய்து வந்தார்கள். நேருக்கு நேரான சண்டையா யிருந்தால் அயர்லாந்தின் கட்சி அழிந்துபோயிருக்கும். எனவே மறைந்திருந்து திடீர் திடீ

ரெனத் தாக்கும் சண்டையாகிய கொரில்லாச் சண்டையைக் கைக்கொள்ள வேண்டியதாயிற்று. ஐரிஷ் தொண்டர்கள் முதலில் ராணுவத்தை எதிர்த்தார்கள். பின்னால் ஸிவில் இலாகாவையும் எதிர்த்து அதை ஸ்தம்பிக்கச் செய்துவிட்டார்கள்.

"ருஷியாவில் அன்னிய ராணுவம் இல்லை. எல்லாம் சொந்த ராணுவந்தான். ஆகவே அதை எப்படி வசப்படுத்துவது என்பதே பிரச்னை. ராணுவ அதிகாரிகள், பணக்கார வகுப்பிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். கடைசிவரையில் அந்த அதிகாரிகள் ஜார் மன்னர் பக்கமே இருந்தார்கள். சிப்பாய்கள் வியவசாய வகுப்பிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகையால், அவர்களைப் போல்ஷ்விக்கர்கள் தங்கள் வசப்படுத்திக் கொண்டார்கள். சிப்பாய்கள் புரட்சியில் சேர்ந்த போது, அதிகாரிகள் அவர்களுடன் வரவில்லை. மாயமாய் மறைந்து விட்டார்கள். முழு ராணுவமும் ஜனங்களுடன் சேர்ந்துகொண்டபடியால், சண்டை போடவேண்டிய அவசியமே இல்லை. எனவே ருஷியப்புரட்சி இரத்தமில்லாப்புரட்சி. சண்டை என்பது போல்ஷ்விக் சர்க்கார் ஏற்பட்ட பின்பே நடந்தது. இங்கிலாந்து பிரான்ஸ் முதலிய நாடுகள் புரட்சிக்கு எதிராகப் படையெடுத்து வந்ததே அந்தச் சண்டைக்குக் காரணம்.

" துருக்கியில் சுல்தானை விட்டுவிட்டு, ராணுவம் கேமால் பாஷாவுடன் சேர்ந்துகொண்டது. இம்மாதிரி சேர்ந்ததற்கு ராணுவ அதிகாரிகளின் பெருமுயற்சியே காரணம். இளந் துருக்கியர் கட்சிக்கு ராணுவ அதிகாரிகள் மிகுந்த ஆதரவு கொடுத்து வந்தார்கள். இந்த அதிகாரிகள் மூலமாகத்தான் ராணுவத்தைப் புரட்சியின் பக்கம் இழுக்க முடிந்தது.

"சென்ற நூற்றுண்டில் இத்தாலியின் சுதந்திரப் போரில் செர்டினியா ராஜாவும், பிரஞ்சுத் துருப்புகளும் சேர்ந்து ஆஸ்திரியாவை எதிர்த்தன. என்றுலும் கரிபால்டி யின் தொண்டர்களின் உதவி அத்தியாவசியமாய் இருந்தது. அந்தத் தொண்டர்கள் உதவியிராவிட்டால், இத்தாலி இன்று சுதந்திரமுள்ளதா யிராது.

"இந்தியாவில் பிரிட்டிஷ் ராணுவமும் இந்திய ராணுவ மும் இருக்கின்றன. இந்திய ராணுவத்தில் கூட அதிகாரிகள் எல்லோரும் பிரிட்டிஷாரே. பீரங்கிப்படையாளர் யாவருமே பிரிட்டிஷார்தான். ஆகவே ருஷியாவைப் போல ராணுவ அதிகாரிகளை நமது பக்கம் திருப்ப முடியாது. ருஷியாவைப் போலவே, வியவசாய வகுப்பிலிருந்தே சிப்பாய்கள் சேர்க்கப் பட்டிருக்கிறுர்கள். வியவசாயிகள் இயக்கம் இந் நாட்டில் ஏற்பட்டால் ராணுவத்தையும் நமது பக்கம் சேர்க்கலாம். அம்மாதிரி இயக்கம் ஏற்படாத வரையில், ராணுவம் நமது கட்சியிடம் அநுதாபம் கொள்ளாது.

"இதற்கு முன்னுல் நாம் தோற்றவைகளிலிருந்து அநேக நீதிகள் அறிந்துகொள்ளலாம். 1857-ல் ஏற்பட்ட சிப் பாய்ப் புரட்சியில் ஜனங்கள் தீவிர ஆதரவோ சாதாரண ஆதரவோ கொடுக்கவில்லை. பிரிட்டிஷாருக்குப் பல வழிகளி லும் உதவி செய்தார்கள். அதனுல் அந்தப் புரட்சி தோற் றது. பட்டணத்து ஜனங்கள் ஆதரவிருந்தாலொழிய, கிராமாந் தரங்களில் கொரில்லாச் சண்டை வெகுகாலம் நீடிக்கமுடியா தென்பதைச் சீதாராம ராஜுவின் புரட்சி காட்டிவிட்டது. 1930-32ல் பர்மாவில் ஏற்பட்ட புரட்சியும் இப்படித்தான் முடிந்தது. பர்மா புரட்சி பெரிய புரட்சி; வியவசாயிகளால்

நடத்தப்பட்டது. அதில் பொங்கிகள் தலைமைவகித்தார்கள். பொருளாதாரக் கஷ்டமே புரட்சிக்கு அடிப்படையான காரணம். நீண்ட காலம் புரட்சி நடந்தது. இருந்தாலும் முடிவில் தோற்றுப்போயிற்று. இதன் காரணமென்ன? பட்டணத்து ஜனங்கள் இதில் சிரத்தை கொள்ளவில்லை. பட்டணங்களைப் பற்றிக் கவலையில்லாமல்போகவே, எல்லாப் பலத்தையும் சர்க்கார் கிராமங்களில் கொண்டு குவிக்க முடிந்தது. 1905-ல் ருஷியாவிலும் இப்படித்தான் நடந்தது. தவிர, படித்த பர்மியர்கள் புரட்சியை ஆதரிக்காமல், பிரிட்டிஷாருக்கு உதவி செய்துவந்தார்கள். ஸிவில் நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்யப் புரட்சி காலத்தில் முயற்சி செய்யப்படவில்லை. அயர்லாந்தில் ஒரு பக்கம் பிரிட்டிஷ் ராணுவத்திற்கு முழு வேலையையும் கொடுத்துவிட்டு, மற்றொரு பக்கத்தில் ஸிவில் நிர்வாகத்தைத் தகர்க்க ஆரம்பித்தார்கள். இதைச் செய்யாமல் இருந்திருந்தால், பிரிட்டிஷார் ஸின்பீன் கட்சியாருடன் சமாஸத்திற்கே வந்திருக்கமாட்டார்கள்.

"1930-ம் வருஷத்தில் ஒரு பிரபல இந்தியத் தலைவருடன், இந்தியா மந்திரி ஆபீஸிலுள்ள ஒரு பெரிய உத்தியோகஸ்தர் பேசிக்கொண்டிருந்தபோது, பின் வருமாறு சொன்னார்:—

'உங்கள் நாட்டில் ஏதோ இயக்கம் இருப்பதாய்ச் சொல்லுகிறீர்கள். உங்கள் முக்கிய தலைவர்களில் ஆயிரம் பேரை ஜெயிலில் போட்டிருக்கிறோம். ஒரு நாய்கூட அதை எதிர்த்துக் குரைக்கவில்லை. ராணுவமும் போலீசும் எப்பொழுதும் போலவே விசுவாசமா யிருக்கின்றன. ஹைகோர்ட்டுகள் போய்விடவில்லை. இன்றும் வேலை செய்துதான் வரு

கின்றன. ஸிவில் வேலைகளில் எவ்வித தொல்லையும் கிடையாது. எனவே உங்கள் இயக்கம் கொசுக்கடியைப் போன்றதுதான்.'

"ஒரு வெளி நாட்டார் நமது இயக்கத்தை எம்மாதிரி மதிப்பிடுகிறார் என்பதைக் கவனியுங்கள்.

"சுதந்திரப் போராட்டம் வெற்றி யடையவேண்டுமானால், முக்கியமான சில காரியங்கள் செய்தாக வேண்டும்.

(1) பிரிட்டிஷ் ராணுவத்திற்கு இடைவிடாமல் வேலை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். ஓர் இடத்தில் வந்து குவியும்படி விடக்கூடாது.

(2) ராணுவத்தின் ஒரு பகுதியையாவது நம்முடன் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

(3) கிராமங்களிலும் பட்டணங்களிலும் ஏக காலத்தில் போராட்டம் நடந்துவர வேண்டும்.

(4) ஸிவில் நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டும்.

(5) ஜனங்களின் சர்க்காரை (போட்டிச் சர்க்கார்) ஏற்படுத்தவேண்டும்.

(6) இந்தப் போட்டிச் சர்க்காரை வெளி நாடுகள் அங்கீகாரம் செய்யவேண்டும்.

வெற்றியோ, தோல்வியோ, பெரும்பாலும் நமது லட்சியத் தெளிவிலும், முறையிலுமே இருக்கிறது. தெளிவில்லாமல், குழப்பமான யோசனை, தலைவர்களுக்கோ பின்பற்றுகிறவர்களுக்கோ ஏற்பட்டால், இயக்கத்திற்குப் பெரிய ஆபத்தேற்படும். ஆகவே அரைகுறையான யோசனையோ,

பேச்சோ முடியுங்காலம் வந்துவிட்டது. இன்று நமது லட்சியம் சுயேச்சையென்றும், நாளை பூர்ண சுயராஜ்யமென்றும், அடுத்த நாள் சுயேச்சையின் சாராம்ச மென்றும் பேசுவது சரியல்ல. மற்றவர்களை ஏமாற்றுவது தவறென்றால் நம்மை நாமே ஏமாற்றுவதும் தவறுதான். ஆகவே நமது லட்சியம் இன்னதென்று தெளிவாய் வரையறுக்கச் சோம்பிக்கொண்டு நம்மையும் பிறரையும் ஏமாற்றக்கூடாது.

"நமது லட்சியம் சுயேச்சைதான்; அதாவது பிரிட்டிஷாருடன் எவ்வித சம்பந்தமும் இல்லாதது என்பதைத் தெளிவாயும், பலமாயும் சொல்லுவோமாக. அபேதவாதக் குடியாட்சியை ஏற்படுத்துவதே நமது நோக்கமென்றும், சுயேச்சை பெறுவது அதற்கு வழியென்றும் தைரியமாகச் சொல்லுவோமாக. நாம் அடையப்போகும் விடுதலை, சமூகப் பொருளாதார ராஜீய விடுதலையென்று பகிரங்கமாய்ச் சொல்லுவோமாக. ஆணுக்கும் பெண்ணுக்கும் விடுதலை வேண்டும். தொழிலாளருக்கும் வியவசாயிகளுக்கும் விடுதலை வேண்டும். உணவு, உடை, கல்வி, கௌரவமான வேலை, எல்லோருக்கும் சந்தர்ப்பங்கள் முதலியவை ஒவ்வோர் ஆணுக்கும் பெண்ணுக்கும் கிடைப்பதே விடுதலை.

"இதை எப்படி அடைவது? சர்க்கார் ரகசியங்களை நாம் அறிந்துகொள்ள வழி செய்யவேண்டும். சர்க்காரின் செல்வாக்கிற்கு உட்படாத பெரும்பான்மையான மக்களை நமது கட்சியில் சேர்த்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். எதிரிகளிடம் வெவ்வேறு துறைகளில் போராட வேண்டும். இப்படிச் செய்வதற்கு ஒரு தலைமைக் காரியாலயம் வழி காட்டுவதற்காக இருக்கவேண்டும். அதிலுள்ளவர்கள் நாளடைவில்

சர்க்காரின் தலைமைக் காரியாலயமாக அது வரப்போகிறது என்ற நினைப்பில் அவர்கள் வேலைசெய்ய வேண்டும்.

“ தலைமைக் காரியாலயத்தில், வெவ்வேறு வகுப்புகளில் வேலை செய்யத் தனித் தனி இலாகாக்கள் இருக்கவேண்டும். அதாவது, வியவசாயிகள், வாலிபர், பெண்கள், தாழ்த்தப் பட்டவர்கள், சிறுபான்மை வகுப்பினர், தொண்டர்கள் முதலியவர்களுக்காக வேலைசெய்ய இலாகாக்கள் ஏற்பட வேண்டும். அதிருப்தி அடைந்திருக்கும் வகுப்புகளை யெல்லாம், தேசிய இயக்கத்தில் சேரும்படி செய்யவேண்டும்.

“ இந்தக் கட்சிக்கு ஒரு பலமான காரியக்கமிட்டி இருக்க வேண்டும். காரியக் கமிட்டிக்கு ஏராளமான அதிகாரங்கள் கொடுக்க வேண்டும். கமிட்டியின் உத்தரவை யாவரும் அப் படியே பின்பற்றி நடக்க வேண்டும். தனிப்பட்டவர்கள் எவ் வளவு பெரியவர்களாயிருந்தாலும், கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டே நடக்கவேண்டும். ஆனால் தனியொருவர் அதிகார மாகிய சர்வாதிகாரத்தை ஒப்புக்கொள்ள முடியாது. பெரும் பான்மையோரின் தீர்ப்பே ஒவ்வொன்றிலும் முடிவானது.

“ நமது போராட்டம், சமூகத்திற்காக ஏற்பட்டது என் பதை மறந்துவிடக் கூடாது. எனவே தனிப்பட்ட யாரையும் விடக் கட்சியே பெரிது. இதுவரை நாம் தூங்கியது போதும். இனியும் தூங்கமுடியாது. எனவே இவ்வழியில் உடனே வேலையை ஆரம்பிக்கவேண்டும்.

“ வெற்றி இல்லையேல் சாவு என்பதே நமது மந்திரமா யிருக்கட்டும். வெற்றி நமக்கே; இந்தியா விடுதலை பெற்றே தீரும். இந்தியா விடுதலை பெற்றால், மனித சமூகம் பிழைத்த

மாதிரி. இந்தியா நீடுழி வாழ்க! உலகப் புரட்சி நீடுழி வாழ்க!"

---

## அத்தியாயம்—14

## ஜெயிலும் விடுதலையும்

1936-ஆம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் லக்ஷ்மணபுரியில் கூடிய காங்கிரஸ் மகாசபைக்கு ஜவாஹர்லாலைத் தலைவராய்த் தேர்ந்தெடுத்தார்கள். கமலா நேருவுக்குக் குணமாய் விடுமென்று எதிர்பார்த்திருக்கும்போது திடீரென்று மார்ச்சு மாதம் 5-ஆந் தேதி அவர் காலமானார். அச்சமயம் ஜவாஹருடன் சுபாஷும் அங்கிருந்தார். இந்தியாவின் நிலைமையைப் பற்றி இருவரும் கலந்து பேசினார்கள். சட்ட மறுப்பு நின்று தேசத்தின் போராட்டம் வேறு வகையில் திரும்பியது. சுபாஷுக்கு இந்தியாவிற்கு வரவேண்டுமென்ற ஆவல் தோன்றியது. பூர்ண தேகசௌக்கியம் பெற்றுவிட்டபடியால், இந்தியாவுக்கு வந்து சேவைசெய்யாமல், ஐரோப்பாவில் காலங்கழிக்க அவர் விரும்பவில்லை.

சுபாஷ் பாபு வந்தால், சர்க்கார் கைதுசெய்யாமலிருப்பார்களா என்று இந்தியா சட்ட சபையில் ஒருவர் கேள்வி கேட்டார். 'கைது செய்வோம்' என்றுசர்க்கார் பதில்சொன்னார்கள். இதைக்கேட்டதும், ஐரோப்பாவில் காலவரையறையில்லாமல் இருப்பதைவிட, இந்தியாவிற்கு வந்து கைதியாகி இந்தியச் சிறையில் இருப்பது மேலென்று சுபாஷ் தீர்மானித்தார். இதற்கிடையில் 1936 மார்ச் 24-ஆந் தேதி யன்று டெல்லி அசெம்பிளியில், பண்டித நீலகண்டதாஸ், சர்க்காரின் பதிலைக் கண்டிப்பதற்காக ஓர் அவசரத்தீர்மானம் கொண்டுவந்தார். அந்தத் தீர்

மானத்திற்குச் சர்க்கார் சார்பில் ஹாலெட் பதில் சொன்னார். அவர் பதிலிலிருந்து, சுபாஷைப்பற்றிச் சர்க்காரின் அபிப்பிரா யம் எம்மாதிரி இருந்ததென்பதை அறிந்து கொள்ளலாமாகை யால், அவர் கூறியதன் சாராம்சத்தைக் கீழே கொடுக்கிறோம்.

"ஸ்ரீ சுபாஷ் போஸைச் சர்க்கார் இந்தியாவிற்குள் அநும திக்கமுடியாது. அவரை விடுதலைசெய்தால் வங்காளத்திற்கு மட்டுமல்ல, இந்தியா முழுவதுக்குமே கெடுதல் ஏற்படும். அவர் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தவர். மிதவாதி களைவிட்டு, புரட்சிகரமாய்க் காங்கிரஸ் மாறி ஒத்துழையா மையைக் கைக்கொண்டதால்தான் அவர் காங்கிரசில் சேர்ந் தார். சௌரி சௌரா சம்பவத்திற்காக ஸ்ரீ காந்தி ஒத்துழையாமையை நிறுத்திவிடவே, ஸ்ரீ போஸுக்குக் காங்கிரசில் அருவருப்பு ஏற்பட்டது. உடனே பலாத் கார இயக்கம் பலமாய் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ போஸ் அதில் சேர்ந்தார். அதனால்தான் அவரை அச்சமயம் கைதுசெய்து பர்மாவில் கொண்டுபோய் வைத்திருந் தோம். 1927-ஆம் வருஷத்தில் அவர் உடம்பு அசௌக் கியம் அடைந்ததால் விடுதலையானார். அப்புறம் அவர் நட வடிக்கைகளைப் பார்த்தால், உடனே பற்றக்கூடிய மாண வர்களையும், தொழிலாளர்களையும் கைவசப்படுத்த முயன் றதை அறியலாம். சர்க்கார் ஊழியர்களைக் கொலை செய் வதையே நோக்கமாய்க் கொண்ட புரட்சிக்காரருடன் அவ ருக்கு நேரடியான சம்பந்தம் இருந்துவந்ததென்பதைச் சர்க்கார் அறிவார்கள். அவர் இந்தியாவிற்குத் திரும்பி னால், அவரைக் கைது செய்யாமல் சும்மா விட்டு வைப்பது பெரிய ஆபத்து. ஏனெனில் அவருக்குச் சமூகத்தில் நல்ல

அந்தஸ்துண்டு. காரியத் திறமையும் அவருக்கு அதிகமாயுண்டு. 1929-ஆம் வருஷத்தில் லாகூர்க் காங்கிரஸில் போட்டிச்சர்க்கார் ஏற்படுத்த அவர் முயன்றதை எல்லோரும் அறிவார்கள். லார்ட் இர்வினுடன் ஸ்ரீ காந்தி ஒப்பந்தம் செய்யப் பேச்சு வார்த்தை நடத்தியபோது, ராஜீயக் கைதிகள் விடுதலையில் பயங்கரக் கைதிகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஸ்ரீபோஸ் பலமாய் முயற்சி செய்தார். 1932-ல் அவரைக் கைது செய்தது, சட்ட மறுப்பில் சேர்ந்ததற்காக அல்ல. அவருடைய நடவடிக்கைகளை அதற்குமுன்பே சர்க்கார் கவனித்துவந்தார்கள். புரட்சிக்காரருடன் அவர் சம்பந்தம் வைத்துக் கொண்டிருந்ததற்காக அவரைக் கைது செய்யும் யோசனை சர்க்காருக்கு இருந்துவந்தது. அதற்காகவே 1932-ல் அவர் கைது செய்யப்பட்டார். காங்கிரசைச் சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ணதாஸ் என்பவர், ஸ்ரீபோஸைப்பற்றி ஒருவருக்கு எழுதிய கடிதத்தைச் சட்ட மந்திரி, முன்னொரு தடவை உங்களுக்கு வாசித்துக் காட்டினார். அதை இதுவரை யாரும் மறுக்கவில்லை. சிட்டகாங்க் ஆயுதச்சாலையைக் கொள்ளையடித்தது போன்ற காரியங்களைச் செய்த புரட்சிக்காரர், 'யுகாந்தா' என்ற கட்சியைச் சேர்ந்தவர்கள். அந்தக் கட்சிக்கு ஸ்ரீபோஸ்தான் தலைவர் என்று ஸ்ரீ கிருஷ்ணதாஸ் எழுதினார்."

கிருஷ்ணதாஸ் மகாத்மாவிடம் காரியதரிசியா யிருந்தவர். அவர் எழுதிய கடிதத்திலுள்ளவைகளைத் தீரவிசாரித்து எழுதினாரா என்பது தெரியாது. என்றாலும் அவர் அஜாக்கிரதையாக எழுதிய கடிதம் சர்க்காருக்கு உபயோகமாயிற்று. இம்

மாதிரியாகப் பொறுப்பற்ற விதமாக அவர் நடந்துகொண்டதற்காக, ராஜேந்திர பாபு அவரைக் காங்கிரஸ் ஆபீஸ் வேலையிலிருந்து உடனே நீக்கிவிட்டார். அச் சமயத்தில், ராஜேந்திர பாபு காங்கிரஸ் தலைவராயிருந்தார்.

சர்க்கார் என்னசெய்தாலும் சரி என்று நினைத்துச் சுபாஷ் இந்தியாவிற்குப் புறப்பட்டுவிட்டார். தாம் இந்தியாவிற்குப் புறப்பட்டு வந்து கைதியாவது சரியா, அல்லது ஐரோப்பாவிலேயே காலவரையறையின்றி இருப்பதா என்பதைப் பற்றி அபிப்பிராயம் கூறும்படி ஜவாஹருக்குச் சுபாஷ் எழுதினார். இது பொறுப்பான விஷயமென்றும், இதைப்பற்றிச் சுபாஷ் முடிவுசெய்யவேண்டுமேயொழியத் தம்மிடம் யோசனை கேட்கக்கூடாதென்றும் ஜவாஹர் பதில் எழுதினார். ஆனால் அவர் பதில் கிடைக்கு முன்பே சுபாஷ் கப்பலேறி விட்டார்

1936-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 8-ஆந் தேதியன்று. சுபாஷ் பம்பாய் வந்திறங்கினார். அங்கேயே சர்க்கார் அவரைக் கைது செய்தார்கள். மார்ச்சு மாதம் 20-ஆந் தேதியன்று குர்ஸியாங்கிலுள்ள அவருடைய சகோதரர் சரத்சந்திரபோஸ் வீட்டில் அவரைப் பந்தோபஸ்தில் வைத்தார்கள். அவர் தேக சௌக்கியம் மறுபடியும் கெட ஆரம்பித்ததால், 1937 மார்ச்சு 17-ஆம் தேதி யன்று அவரை நிபந்தனையில்லாமல் சர்க்கார் விடுதலைசெய்தார்கள். அவர் விடுதலையான சமயத்தில் டெல்லியில் தேசிய கன்வென்ஷன் நடந்துகொண்டிருந்தது. அவர் விடுதலைச் செய்தியைக் கேட்டதும், கன்வென்ஷனுக்கு இந்தியாவெங்குமிருந்து வந்திருந்த காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும் ஆனந்தமடைந்தார்கள். ராஷ்டிரபதி ஜவாஹர்லால் க

இச்செய்தியைச் சபையில் அறிவித்ததும், கரகோஷம் வானைப் பிளந்தது. உடனே கன்வென்ஷனுக்குப் புறப்பட்டு வரும்படி தந்தி அனுப்பினார்கள். ஆனால் மிகவும் பலவீனமாயிருந்தபடியால், வர முடியவில்லையென்று அவர் அனுப்பிய பதிலையும் கன்வென்ஷனில் ஜவாஹர்லால் வாசித்தார். ஏப்ரல் மாதம் 26-ஆந்தேதி டல்ஹௌஸி என்ற இடத்தில் வாசஞ் செய்வதற்காகப் புறப்பட்ட சுபாஷ் அலகாபாத்தில் இறங்கி, 2 தினங்கள் ஆனந்த பவனில் தங்கினார். அத்தினங்களில் மகாத்மாவுடனும், ஜவாஹருடனும் ராஜீய விஷயங்களைப்பற்றிப் பேசினார். பின்னால் சிகிச்சை பெறுவதற்காக ஆஸ்திரியாவுக்கு விமானம் மூலம் நவம்பர் 18-ஆந்தேதி புறப்பட்டார். சென்ற ஜனவரி மாதம் 11-ஆந் தேதியன்று லண்டனுக்குச் சென்று பல பிரசங்கங்கள் செய்தார். லண்டனுக்கு வந்திருந்த டிவேலராவை இருமுறை சந்தித்துப் பேசினார். ஜனவரி 19-ஆந்தேதி கராச்சி வந்துசேர்ந்தார்.

---

## அத்தியாயம்—15

## மந்திரி பதவிகளால் வரும் நன்மை தீமைகள்

மந்திரி பதவிகள் ஏற்பதைச் சுபாஷ் போஸ் ஆதரிப்பவரல்ல. என்றாலும், உறுதியான காங்கிரஸ்காரர்கள் மந்திரிகளாக வந்து, மந்திரி சபைச் சுழலுக்குள் அகப்படாதவர்கள் பலர் வெளியிலிருந்து மந்திரிசபை வேலைகளை உஷாராய்க் கவனித்து வந்தால், பல நன்மைகள் ஏற்படுமென்பது அவர் அபிப்பிராயம். மந்திரி பதவிகளை ஏற்பது கொள்கையிலேயே தவறு என்ற அபிப்பிராயம் அவருக்குக் கிடையாது.

பிரிட்டிஷ் மன்னரிடம் விசுவாசத்தோடு நடப்பதாகப் பிரமாணம் செய்வதில்கூடத் தவறிருப்பதாக அவர் நினைக்கவில்லை. அந்தப் பிரமாணம் வெறும் அரசியல் பிரமாணம் என்பதே அவர் அபிப்பிராயம். ராஜ விசுவாசப் பிரமாணம் செய்து சட்டசபைக்குள் சேர்ந்த டிவேலரா, அந்தப் பிரமாணத்தையே பின்னால் நீக்கிவிட்டது தவறென்று அவர் கருதவில்லை. பதவிகள் ஏற்பவர்கள் அந்த வேலையிலேயே மூழ்கிப் போய்விடுவார்களாகையால், அடிப்படையான பெரிய பிரச்னைகளைப் பற்றி யோசிக்க அவர்களுக்கு அவகாசம் கிடையாதென்பது அவர் கருத்து. அதனால்தான், அவற்றை யோசிப்பதற்கு மந்திரி சபையில் சேராமல் வெளியே சில தலைவர்கள் இருக்கவேண்டுமென்பது அவர் அபிப்பிராயம். பதவி ஏற்பதிலுள்ள சாதகபாதகங்களைப்பற்றி அவர் கொண்டுள்ள கருத்துக்களைக் கீழே வெளியிடுகிறோம்:—

"சுதந்திரப் போராட்டத்தை நடத்துகிறவர்கள், போராட்டத்தில் வெற்றி பெற்றதும், நிர்மாண வேலையை மேற்கொள்ள வேண்டிய பொறுப்புண்டு என்பதே என்னுடைய அபிப்பிராயம். 'நமது வேலை முடிந்தது' என்ற சாக்குச் சொல்லிப் பொறுப்பைத் தட்டிக்கழிக்க முடியாது. எனவே அழித்தலைப்போல ஆக்கவும் முடியும் என்பதைக் காட்டவேண்டும். ஆனால் அந்த வெற்றி, இந்திய அரசியல் சட்டத்தால் வந்துவிட்டதா என்று கேட்டால், இல்லையென்றே சொல்லுவேன்.

"ராஜீயப் போராட்டத்தில், எல்லா ஸ்தானங்களையும் கைவசப்படுத்திக்கொண்டு நமது நிலைமையைப் பலப்படுத்த

வேண்டுமென்று சிலர் சொல்லலாம். ஆனால் அம்மாதிரி பிடிக்கும்போது, அந்தப் பதவிமோகத்தில் மூழ்கிப்போய் விடாமல் இருப்போமா, ராஜீய முன்னேற்றத்திற்கு அவசியமான புரட்சி மனப்பான்மையை விட்டுவிடாமல் இருப்போமா என்பதைக் கவனிக்கவேண்டும். நமது போராட்டத்தில் பாதி வெற்றிகூட இன்னம் கிடைக்கவில்லை. இந்த நிலைமையில், காங்கிரசிலுள்ள முக்கியமான தலைவர்களை மந்திரி பதவி ஏற்கும்படி விட்டுவிடமுடியாது. ஆனால் முதல்தரமான காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவிக்கு வராவிட்டால், மாகாண சுயாட்சி சட்டத்தை நமக்குச் சாதகமாகப் பூர்ணமாய் உபயோகிக்கவும் முடியாது.

"சர்க்கார் நிர்வாக அநுபவம் காங்கிரசுக்கு மிகவும் அவசியமென்றும், அதற்காக இந்தச் சர்ந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொள்ள வேண்டுமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். அது தவறு. நிர்வாக அநுபவம் வேறு; ஜனங்களைக் கட்டுப்பாடாக்கும் காரியத் திறமை வேறு. இந்தக் காரியத் திறமை ராஜீயக் கட்சிக்கு மிகவும் பயன்படும். ஆனால் நிர்வாக அநுபவம் அநேகமாய் இடையூறாகவே இருக்கும். சென்றயுத்தத்திற்குப் பின்னால் ஐரோப்பாவில் ஏற்பட்ட பெரிய ராஜ்ய நிர்வாகிகள் எல்லாரும் அதற்கு முன்பு அரசாங்க நிர்வாக அநுபவம் இல்லாதவர்களே. லெனின், ஸ்டாலின், ஹிட்லர், முஸோலினி, கெமால் பாஷா முதலியவர்களே அதற்கு உதாரணம். வெற்றிக்குப் பின்னால் ஏற்படும் புதிய அரசாங்கத்தை நடத்தவேண்டிய நிர்வாக முறையே புதிய தினுசாயிருக்க வேண்டும். ஆகவே பழைய நிர்வாக அநுபவம் அவ்வளவு அவசியமல்ல. தைரியமும், யோசனையுமே அவசியம். ருஷியாவில் ஐந்துவருஷத்திட்டத்தையும், துருக்கியில்குடியர



12. ஸ்ரீமதி சரோஜினி, பட்டேல், சுபாஷ், அஸாத், ஜவாஹர்

சையும், இத்தாலியில் புதிய ஏகாதிபத்தியத்தையும், பாரசீகத்தில் குழப்பம் லஞ்சம் என்பவற்றை ஒழித்துப் புதிய சர்க்காரையும் ஏற்படுத்தியவர் நிர்வாக அநுபவமுள்ளவர்களா?

"புதிய சீர்திருத்தத்தில், மத்திய சர்க்கார் கையிலேயே முக்கியமான அதிகாரங்கள் இருக்கின்றன. மாகாண சர்க்கார்களின் கையில் சொற்ப அதிகாரங்களே வந்திருக்கின்றன. முதலில் மந்திரிகளுக்கு முன்னால் தரித்திரம், வேலையில்லாமை, வியாதி, படிப்பின்மை முதலிய பெரிய குறைகள் வந்து நிற்கின்றன. இவற்றைத் தீர்க்கவேண்டுமானால் ஏராளமான பணமும் சௌகரியமுமுள்ள சுத்த தேசிய சர்க்காரால்தான் முடியும். நிலவரிக் குறைவும், மது விலக்கும் மட்டும் செய்வதென்றால்கூட பணத்திற்குத் திண்டாட்டமாய்விடும். சுயராஜ்யம்பெற்ற நாடாயிருந்தால், செலவைக் குறைக்கச் சர்க்கார் முயல்வார்கள். நமது மாகாண சர்க்கார்களோ, உயர்பதவியிலுள்ளவர்களின் சம்பளத்தைக் குறைக்க அதிகாரமில்லாதவர்கள். ராணுவம், ரயில்வே, தபால், தந்தி, சுங்கம் முதலிய இனங்கள் மத்திய சர்க்காரைச் சேர்ந்தவை. அவற்றின் செலவைக் குறைக்கவோ, அல்லது அதிக வரும்படிக்கு வழி செய்யவோ மாகாண சர்க்கார்களால் முடியாது. நாணய செலாவணி மத்திய சர்க்காரைச் சேர்ந்ததால், நோட்டுகளை அதிகமாக வெளியிட்டுப் பணம் பெறவும் முடியாது. கடன் வாங்கி ஜனங்களின் நன்மைக்காகச் செலவழிப்பதென்றால் அதற்குக் கவர்னரும் வைசிராயும் சம்மதிக்கவேண்டும். ஆகவே உருப்படியான வேலைகளைச் செய்வதற்கு மந்திரிகளுக்கு வழியில்லை.

"வேறு சில விஷயங்கள் அவர்கள் செய்யலாம். ராஜீயக் கைதிகளை விடுதலை செய்யலாம். அடக்குமுறைச் சட்டங்களை ரத்து செய்யலாம். மாகாண சர்க்கார் நிர்வாகத்தில், பொது ஜன சேவை என்ற புது உணர்ச்சியை உண்டுபண்ணலாம். காங்கிரஸ் நிர்மாண திட்டங்களுக்கு உதவி செய்யலாம். சமூக சுகாதார விஷயங்களில் சீர்திருத்தச் சட்டங்கள் செய்யலாம். தேசிய உணர்ச்சிக்கு அதிக ஆதரவு கொடுத்துப் பிற்போக்காளர்களின் பலத்தைக் குறைக்கலாம். சமஷ்டி வருவதைத் தடுக்கத் தங்கள் பதவிகளை உபயோகிக்கலாம். காங்கிரஸ்காரர்களல்லாத மந்திரிகள் மோசமாய்ப் போகாமல், தங்கள் செய்கைகளால் தடுத்துவரலாம்.

"ஆனால் இவையெல்லாம் சில்லரை விஷயங்கள். முக்கியமான குறைகளான தரித்திரம், வேலை யில்லாமை, வியாதி, படிப்பின்மை முதலியவை மீண்டும் அப்படியேதான் இருந்து வரும். இவற்றையெல்லாம் தீர்க்க வேண்டுமானால் மத்திய சர்க்காரில் பொறுப்பாட்சி இருக்கவேண்டும். அந்தச் சர்க்கார் மாகாண சர்க்கார்களுடன் ஒத்துழைப்பதா யிருக்கவேண்டும். இந்த விஷயம் சீக்கிரம் வெட்ட வெளிச்சமாய் விடும். அப்படியானால் காங்கிரஸ் மந்திரி பதவி ஏற்பதால் உருப்படியாக ஏதுவும் ஏற்படமுடியாதா என்று கேட்கலாம். பெரிய பலன்கள் ஏற்படுமென்று எனக்கு நம்பிக்கை யில்லாவிட்டாலும், நமது பூர்ண சுதந்திர லட்சியத்தைத் துரிதமாக அடைதற்குரிய காரியங்களைச் செய்யமுடியும். ஆனால் அவைகளை நாம் பெறவேண்டுமானால், எப்பொழுதும் விழிப்பா யிருக்க வேண்டும். ஏனெனில், சட்ட பூர்வமான வேலைகளில் சுலபமாய்க் காலங்கழிக்கலாம் என்ற நம்பிக்கையுள்ளவர்கள் பலர்

இருக்கிறார்கள். மந்திரி பதவிகளைக் காங்கிரஸ் ஏற்பதால் கிடைக்கக்கூடிய பெரிய பலன் என்னவென்றால், பிரிட்டிஷா ருக்குப் பின்னால் காங்கிரஸ்காரர்தான் ராஜ்யத்தை நடத்து வார்கள் என்ற நம்பிக்கை ஜனங்களுக்கு ஏற்படுவ தாகும். இதனால் உண்டாகும் பலன் அளவிட முடியாததாகை யால், மற்றெந்தப் பலனையும்விட இதையே நான் பெரிதாய்க் கொள்ளுகிறேன். இரண்டாவதாக, காங்கிரசிலிருக்கும் சில பலவீனமானவர்களுக்கு, மந்திரி சபையைக் காங்கிரஸ் அமைப் பதால் தைரியம் ஏற்பட்டு, எதிர்காலத்தில் அதிகமான தியாகம் செய்யும் ஊக்கம் உண்டாகும். மூன்றாவதாக, சமஷ்டியை எதிர்க்க உபயோகப்படும். நான்காவதாக, புதிய சீர்திருத்தம் எவ்வளவு உபயோகமற்றது என்பதை உலகிற்குக் காட்டமுடி யும். இந்த அநுபவங்களால் அடுத்த போராட்டத்திற்குத் தேசத்தைப் பெரிய முறையில் தயார்செய்ய முடியும். ஆகவே இந்த நான்கு நன்மைகளும் ஏற்பட்டுவிட்டால், பதவி ஏற்றதற்கு இவை போதுமான பலன் என்று நான் திருப்தி யடைவேன்.

"மகாத்மா காந்தி, பண்டித ஜவாஹர்லால், சர்தார் பட் டேல், ராஜேந்திர பிரசாத் ஆகிய பெரிய தலைவர்கள் சட்ட சபைக்குள் போகாமல் வெளியே நிற்பது திருப்திகரமான விஷயமாகும். சட்டபூர்வமான கிளர்ச்சியில் காங்கிரஸ் மூழ் கிப்போய்விடாமல் பார்த்துக்கொள்ளுவதற்கு இது ஒரு பாதுகாப்பாயிருக்கும். காங்கிரஸ் மந்திரிகள், காங்கிரசின் உத் தரவைச் சரியாய் நிறைவேற்றுகிறார்களா என்பதை இந்தத் தலைவர்கள் பார்த்துக்கொள்ளுவார்கள். மகாத்மா காந்தி காங் கிரசிலிருந்து விலகியிருந்தபோதிலும், மிக ஜாக்கிரதையாகக் காங்கிரஸைக் கண்காணித்துவருகிறபடியால், அவசியம்

நேரிடும்போது, மந்திரிகளை ராஜீநாமா செய்யச்சொல்லி, தமது கடைசிப் போராட்டத்திற்காகச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்கத் தவறமாட்டார்."

---

## அத்தியாயம்—16

## ராஷ்ட்ரபதி சுபாஷ்

சுபாஷ் சந்திர போஸுக்குத் தற்சமயம் 41-வயது. 5¾ அடி உயரமிருப்பார். சிவப்பு நிறம். இரும்பைக்கூட துளைத்து விடுமோ என்று சொல்லக்கூடிய ஊடுருவிப் பாயும் கண்கள்; உறுதியைக் காட்டும் மோவாய்க்கட்டை; வசியப்படுத்தும் முகத்தோற்றம்; ஆத்மார்த்திகத்திலும், லட்சியக்கனவிலும் புத்திப் போக்குள்ளவர் என்பதைக் காட்டக்கூடிய மெல்லிய அழகான கைவிரல்கள்; அபாரமான நெஞ்சுறுதி; தமக்குச் சரியென்று பட்டதிலிருந்து, என்னவரினும் விலகாத முதலைப் பிடி; இவைகளுடன் இளைஞர்கள் போற்றும் பேறுபெற்றவர். தனிப்பட்ட முறையில் ஒழுக்கமும், மிகுந்த பணிவுமுள்ளவர். இத்தகைய ஒருவரை, இந்தியா பெற்றெடுத்ததற்காக மிகுந்த பெருமைகொள்ள உரிமையுண்டு. காரியத்திறமையில் நிபுணர்களான பிரிட்டிஷார், சுபாஷின் காரியத் திறமையைப் பாராட்டுவதென்றால், எவ்வளவு நிபுணராய் அவர் இருக்கவேண்டும்! வாலிபர்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர்கள் இந்தியாவில் இரண்டேபேர்தான். ஒருவர் ஜவாஹர்லால்; மற்றொருவர் சுபாஷ். எனவே ஜவாஹருக்கு அடுத்தாற்போலச் சுபாஷ் ராஷ்ட்ரபதியாக வருவது மிகவும் பொருத்தமானதே. இந்தச் சிறந்த புத்திரரைப் பெற்ற சுபாஷின் தந்தை, 1921-ல் அவர்

ஜெயிலுக்குப் போனவுடன், "சுபாஷைக்கண்டு நான் பெருமை யடைகிறேன்" என்றார். ஐ. ஸி. எஸ். வேலையை உதறிவிட்டு ஜெயிலுக்குப் போகும் ஒரு புத்திரனைப் பார்த்துப் பெருமை கொள்ளும் தந்தைமார் இந்தியாவில் வெகு வெகு அபூர்வம். அந்த அபூர்வத் தந்தையரில் சுபாஷின் தந்தையாரும் ஒருவர். அவர் 1931-ல் சுபாஷ், சுதந்திர தின ஊர்வலத்தில் அடிபட்டதைக் கேட்டதும், தமது ராய்பகதூர்ப் பட்டத்தைத் துறந்துவிட்டது அதிசயமல்ல.

சுபாஷ் போஸ் ராஜீய இயக்கத்தில் சேர்ந்து 17 வருஷங்கள் ஆகின்றன. இந்த 17 வருஷங்களில் அவர் ஜெயிலிலோ, தேசப்பிரஷ்டத்திலோ கழித்தது 10 வருஷங்களாகும். பாக்கி 7 வருஷங்களிலும் அவர் ஜெயில் வாசத்தால் ஏற்பட்ட அசௌக்கியத்தைப் போக்கிக்கொள்ள நோயாளியாயிருந்து கழித்த வருஷங்கள் இரண்டு. மீதமுள்ள 5 வருஷங்களே அவர் வெளியில் சுதந்திரமா யிருந்து தேசத்திற்காகப் பாடுபட்ட காலம். இந்த ஐந்து வருஷ வேலைகள், 12 வருஷங்களுக்கு அவர் வேலைசெய்ய முடியாமல் தடுத்துவிட்டன. அதாவது இளமையின் பெரும்பாகத்தைத் தேசத்திற்காக அவர் உபயோகிக்கவிடாமல் சர்க்கார் செய்துவிட்டது. சுபாஷின் தியாகத்திற்கும், புத்திசாலித்தனத்திற்கும், அவர் முன்பே ராஷ்ட்ரபதியாக வந்திருக்க வேண்டும். அப்படி வராமல் போனதற்கு முக்கியமான காரணம் அவர் ராஜீய வாழ்க்கையின் பெரும் பாகம் ஜெயிலிலோ, வெளி நாடுகளிலோ கழிந்ததாகும். மற்றொரு காரணம், காந்தி முறைகளில் அவருக்குள்ள நம்பிக்கையின்மை ஆகும்.

சுபாஷ் இயற்கையிலேயே ஒரு புரட்சிக்காரர். அதாவது 'சரி, சரி' என்று சொல்லக் கூடியவரல்ல. ஒவ்வொன்றும் புத்திக்கும், யுக்திக்கும் சரியா யிருக்கிறதா என்று யோசித்தே முடிவு சொல்லுவார். மகாத்மாவின் முறைகள் சில சமயங்களில் அவருடைய ஆராய்ச்சிக்குத் தட்டுப்படக்கூடியனவாக இல்லை. அதனால்தான் அவர் மகாத்மாவின் வழிகளை எதிர்த்தார். அதற்காக அவரைக் குற்றஞ் சொல்லமுடியாது. தம்முடைய புத்தியாலும், யுக்தியாலும் மகாத்மாவின் முறைகளை அலசிப்பார்த்து, அதன்மேல் தம் அபிப்பிராயங்களை வெளியிட முன்வந்த அவருடைய தைரியத்தைப் பாராட்ட வேண்டும். அவருடைய புரட்சிக் குணமே அந்தத் தைரியத்திற்குக் காரணம்.

மகாத்மாவின் வழிகளை அவர் இப்பொழுது ஒப்புக் சொள்ளுகிறாரா என்று கேட்கலாம். அவர் சென்ற வருஷம் விடுதலையான பின்பு பேசியவைகளையும் எழுதியவைகளையும் கவனித்தால், அஹிம்சையுடன் கூடிய சட்ட மறுப்பு ஒன்றே இந்தியாவிற்குத் தகுதியானது என்பதை ஒப்புக்கொண்டு விட்டார் என்றே தோன்றுகிறது. பலாத்கார முறைகளை வெகு பலமாய் அவர் கண்டித்து வருகிறார். அஹிம்சைதான் வழி என்பதை ஏற்றுக்கொண்டு விட்டால் மற்ற விஷயங்களில் இருக்கும் அபிப்பிராய பேதங்கள் அவ்வளவு பெரியவையல்ல. ஏனெனில், சகல விதமான அபிப்பிராயங்களையும் காங்கிரசில் சொல்லவோ, தங்கள் வழிக்குக் காங்கிரஸைத் திருப்பவோ ஒவ்வொரு காங்கிரஸ்காரருக்கும் உரிமையுண்டு.

சட்ட சபை வேலைகளில், மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபை இருப்பதால் ஏற்படும் சாதக பாதகங்களைப் பற்றிய அவர் அபிப்பிராயத்தை முன்பே தெரிவித்திருக்கிறோம்.

இதை எழுதும்போது, ஐக்கிய மாகாண மந்திரி சபையும், பீஹார் மந்திரி சபையும் ராஜீநாமா செய்த செய்தி கிடைத்திருக்கிறது. மற்றக்காங்கிரஸ் மந்திரிகளும் ராஜீநாமாச்செய்யுமா என்பது காரியக் கமிட்டியின் தீர்ப்பைப் பொறுத்திருக்கிறது. போராட்டம் என்ருல் துள்ளிக் குதிக்கும் உற்சாகமுள்ள சுபாஷுக்கு, அவர் தலைமைப் பதவியை ஏற்கும்போதே மந்திரி சபை ராஜீநாமா நெருக்கடியும், போராட்டமும் ஏற்பட்டிருப்பது ஒரு பெரிய விசேஷமாகும். அறியாமையினுல் ராஜீயக் கைதிகள் விடுதலை விஷயத்தில் முட்டுக்கட்டை போட்டு வைசிராய் வந்து சிக்கிக் கொண்டார். இந்தப் போராட்டமே - இந்த நெருக்கடியே - பெடரேஷனை எதிர்க்கும் பெரிய போராட்டமாய் வளர்ந்துவிடப் போகிறது.

காரியந்திறமையும், சுறுசுறுப்புமுள்ள சுபாஷ் தலைமையில் இந்தப் போராட்டம் ஆரம்பமாவது ஒரு சுப சகுனமாகும். சுபாஷின் தீவிரத்திற்கு ஏற்றபடியே சந்தர்ப்பங்களும் வந்து வாய்த்திருப்பதைக்கண்டு ஆச்சரியமும், சந்தோஷமும் கொள்ளுகிறேும்.

புதியதாக நேரப்போகும் போராட்டமே சுயராஜ்யப் போராட்டங்களில் மிகப் பெரியதும், கடைசியானதுமாயிருக்குமென்று தலைவர்கள் கூறியிருக்கிருர்கள். கவர்னர்கள் ராஜீயக் கைதிகளை விடுதலை செய்தால் சரி. இல்லாவிட்டால், அந்த மகத்தான போராட்டம் ஆரம்பமாய்விடும். அந்தக் காட்சியைக் கண்டு களிக்க முதியோரும், அதில் கலந்து தொண்டுபுரிய வாலிபர்களும் ஆர்வங்கொண்டு நிற்கிருர்கள். பிரிட்டிஷாரின் தந்திரங்களையும், அவற்றை மடக்குவதற்காக டிவேலரா போன்றவர்கள் மேற்கொண்ட முறைகளையும் நன்கறிந்த சுபாஷ், தம்முடைய சர்வதேச அரசியல் அநுபவங்

களையும் சேர்த்து, வரப்போகும் போராட்டத்தைத் திறமையோடு நடத்துவார்.

பிப்ரவரி 13-ஆந் தேதியன்று ராஷ்டிரபதி சுபாஷ், ஹரிபுராவிற்கு விஜயஞ் செய்தார். அவர் ஊர்வலமாய் ஏறிச் சென்ற ரதம், அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணபகவானுல் ஓட்டப் பட்டதென்று ஒரு கதை சொல்லப்படுகிறது. இது மெய்யானு லும் சரி, பொய்யானுலும் சரி, கிருஷ்ணபகவான் அர்ச்சுன னுக்குச் சாரத்தியம் செய்து வெற்றி மாலை சூட்டியதைப் போல, பாரத சமுதாயத்திற்கு இவ்வருஷம் ராஷ்ட்ரபதி சுபாஷ், சாரத்தியம் செய்து, சுயராஜ்யத் திரு நாட்டில் கொண்டுபோய்ச் சேர்ப்பாராக.

இப்புத்தக முதல் பதிப்பு வெளியான பின்பு, பீஹாரி லும் ஐக்கிய மாகாணத்திலும் ஏற்பட்ட நெருக்கடி தீர்ந்து விட்டது. வைசிராய் வந்து சிக்கிக்கொண்டார் என்று மேலே குறிப்பிட்டிருந்தோம். அது உண்மையாய் விட்டது. அதாவது, மகாத்மா சொல்லிய நிபந்தனைகளை கவர்னர்களும் வைசிராயும் ஒப்புக்கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டது. எனவே காங்கிரசுக்கு இது மகத்தான வெற்றியாகும். இந்த நெருக்கடியில் மகாத்மாவின் ராஜ தந்திரம் வென்றது. மகாத்மாவிற்கு பக்கபலமாய் நின்று, சுபாஷ் போஸ் நிதான புத்தி காட்டியது மெச்சத் தக்கது. இதிலிருந்து, சுபாஷின் அக்கிராசனுதிபத்திய காலத்தில், காங்கிரஸ் இன்னம் அதிக ஒற்றுமையுடனும், பலத்துடனும் வளர்ந்து பிரகாசிக்கு மென்பதை நிச்சயமாய் எதிர்பார்க்கலாம்.

பிரிட்டிஷ் ராஜதந்திரத்தை, மகாத்மாவின் ராஜதந்திரம் தோற்கடிக்கு மென்பதையும், மகாத்மா பெரிய ராஜதந்திரி

என்பதையும், இந்த சம்பவத்திலிருந்து சுபாஷ் அறிந்து கொண்டிருப்பார்.

பாபு சுபாஷ் சந்திர போஸ், நீடிய ஆயுளும், குன்ரு வலிமையும், தளரா ஊக்கமும், நோயற்ற வாழ்வும் பெற்று, பாரத நாட்டிற்குத் திருத்தொண்டு புரிவாராக.

வந்தே மாதரம் !

# காங்கிரஸ் சரித்திரம்

[ஸ்ரீ M. S. சுப்பிரமண்ய ஐயரவர்கள் இயற்றியது.]

ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதி அவர்கள்

சிறப்புரையுடன்

| | | |
|---|---|---|
| 258-பக்கங்கள் தலைவர்கள் படங்களுடன் | மலிவான பதிப்பு உயர்ந்த காகிதத்தில் அச்சிட்டு, கலிகோ பயிண்ட் செய்தது. | விலை ரூபா 1 |

## சில முக்கிய அபிப்பிராயங்கள்

குமரன்:—"நல்ல நூலொன்றை மிகச் சிரமப்பட்டு, நல்ல சந்தர்ப்பத்தில் வெளியிட்டிருக்கும் அல்லயன்ஸ் கம்பெனியார் அதிக நன்றிக்கு உரியவராவார்கள்.

குமார விகடன்:-யாவரும் உணரத்தக்க மிக எளிய தமிழ் நடையில், இந்தியாவில் ஆங்கிலேயர் தோற்றமுதல், இன்றைய நடைமுறை வரையில், விளக்கமாகவும் விரிவாகவும் எழுதப்பட்டுளது. தமிழ்நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் விரும்பிப் பெற வேண்டிய நூல்களில் இதுவும் ஒன்றென்பது மிகையாகாது.

ஜய பாரதி :—"இனிமையான எளிய நடையில் இச்சரித்திரத்தை எழுதியுள்ளார். தமிழர் ஒவ்வொருவர் கையிலும் இப்புத்தகம் அவசியம் இருக்கவேண்டும்.

"தினமணி" ஆசிரியர் T. S. சொக்கலிங்கம் அவர்கள் எழுதுவது:—"முக்கியமான விஷயங்களை விடாமலும், தமிழர் சுலபமாயும் தெளிவாயும் அறியும் விதத்திலும், காங்கிரஸ் சரித்திரத்தை எழுதியிருக்கிறார். இப்புத்தகத்தை தமிழர்கள் ஏராளமாய் வாங்கி ஆதரிப்பார்களென்று நம்புகிறேன்.

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

அம்மா சற்றுப் பொறு! இதோ வந்துவிட்டேன்!!

இரவு 11-மணி யாகிவிட்டது. நேரமாகியும் மகள் உணவு கொள்ள வரவில்லை. தாயார் கவலையுடன் அவள் இருக்குமிடம் சென்ருள். அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

தாயார் :— என்னம்மா! இன்னமும் விளக்கெரிந்து கொண்டிருக்கிறது. சாப்பிடவுமில்லையே உடம்பு கெட்டு விடாதா?

மகள் :— அம்மா சற்று பொறு! இதோ வந்துவிட்டேன். புத்தகத்தைக் கீழே வைக்க மனமில்லை. ஐயோ, பாவம் சுந்தரிக்கு நேர்ந்த கஷ்டம் இன்னும் நீங்கவில்லை. அவளுக்கு ஏதாவது விமோசனம் உண்டா என்பதைப் பார்த்துவிட்டு வருகிறேன்.

## என்ன புத்தகம் அது?

# அதுவே

நாகரிகம் அல்லது

# சுந்தரி பரிணயம்

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இந்த நவீனம்

'சுதேச மித்திரன்' உதவி ஆசிரியர்

ஸ்ரீமான் தே. உலகநாத நாயகர்

எழுதியது

தமிழ்ப் பெரியார் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், சிறப்புரை பெற்றது.

இனிய தமிழ், நல்ல நடை, நெஞ்சை அள்ளும் கதைப் போக்கு யாவும் ஒருங்கே அமைந்த இந் நாவலைப் பலரும் படித்துப் பயன் பெறவே

விலை எட்டணு வைக்கப்பட்டிருக்கிறது.

(சித்திரப் படங்களும் கொண்டது.)

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.